# ஷோடஸ கணபதி கோவில்



உ

ஸ்ரீ காமாக்ஷியை நம:

ஸ்ரீ சந்த்ர மௌளீஸ்வராய நம:

# ராமேஸ்வரம் ஸ்ரீ சங்கர மண்டபம்



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் மடம்

அக்னி தீர்த்தம், ராமேஸ்வரம்



உ

॥ श्रीरस्तु ॥

श्रीमहागणपतिभ्यो नमः ।

# ॥ श्रीषोडशमहागणपति स्तुतिमाला ॥

बालस्तरुणभक्तौ च वीरश्शक्तिर्ध्वजस्तथा ।
सिद्धिरुच्छिष्टविघ्नेशः क्षिप्रो हेरंबनायकः ॥

लक्ष्मीगणो महाविघ्नो विजयः कल्पहस्तकः ।
ऊर्ध्वविघ्नेशपर्यन्ताः षोडशैते गणाधिपाः ॥

धर्ममर्थं च कामं च लभते यत्प्रसादतः ।
स्तोत्रं तद्विघ्नराजस्य कथ्यते षोडशात्मजः ॥

உ

ஸ்ரீ கணேசாய நம:

# சோடச விநாயக ஸ்துதி மாலை

ராமேஸ்வரம்

பாலஸ்தருணபக்தௌ ச வீரஶ்ஶக்திர்த்வஜஸ்ததா ।
ஸித்விருச்சிஷ்டவிக்ணேஶ: க்ஷிப்ரோ ஹேரம்பநாயக: ॥

லக்ஷ்மீகணோ மஹாவிக்நோ விஜய: கல்பஹஸ்தக: ।
ஊர்த்வவிக்நேஶபர்யந்தா: ஷோடஶைதே கணாதிபா: ॥

தர்மமர்த்தம் ச காமம் ச லபதே யத்ப்ரஸாதாத: ।
ஸ்தோத்ரம் தத்விக்நராஜஸ்ய கத்யதே ஷோடஶாத்மஜ: ॥



## १.वालगणपति:

## 1. பாலகணபதி:

करस्थकदलीचूतपनसेक्षुकमोदकम् ।
वालसूर्यप्रभाकारं देवं वालगणाधिपम् ॥

கரஸ்தகதலிசூத பனஸேக்ஷுக மோதகம் ।
பாலஸூர்யப்ரபாகரம் தேவம் பாலகணாதிபம் ॥

1. நான்கு கைகள், யானை முகம், பால சூரியனை யொத்த நிறம், குழந்தை வடிவம், வாழைப்பழம், மாம்பழம், பலாப்பழம், கரும்பு இவைகளை நான்கு கைகளில் தாங்கி, துதிக்கையில் மோதகம் தாங்கியவர்.

–பால கணபதி.



## २.तरुणगणपतिः

## 2. தருண கணபதி:

पाशाकुशापूपकापत्थ
जम्बूफलं तिलान्वेणुमपि स्वहस्तैः ।
धृतः सदा यस्तरुणारुणाभः
पायात्स युष्मान् तरुणो गणेशः ॥

பாஶாங்குஶாபூப கபித்த ஜம்பூ
பலம் திலான்வேணுமபி ஸ்வஹஸ்தை:
த்ருத: ஸதா யஸ்தருணாப: பாயாத்ஸ
யுஷ்மாந் தருணோ கணேஶா:

2. யானை முகம், எட்டு கைகளில் முறையே பாயசம், அங்குசம், மோதகம், விளாம்பழம், நாகப்பழம், ஒடிந்த கொம்பு (தந்தம்), நெற்கதிர், கரும்புத்துண்டு இவைகளுடன் பகல் சூரியனைப் போன்ற மேனிபடைத்தவர்.

– தருண கணபதி.



## ३. भक्तगणपति:

## 3. பக்த கணபதி:

नाळिकेराम्लकदलीगुडपायसधारिणम् ।
शरच्चन्द्राभवपुषं भजे भक्तगणाधिपम् ।।

நாளிகேராம்லீகதலீ குடபாயஸதாரிணம் ।
ஶரச்சந்த்ராபவபுஷம் பஜே பக்தகணுதிபம் ।।

3. சரத்கால சந்திரன் போன்ற வெண்ணிறம் படைத்து நான்கு கைகளில் தேங்காய், மாம்பழம், வாழைபழம், பாயஸ பாத்திரம் ஏந்தி யானை முகத்துடன் விளங்குகிறவர்.

– பக்த கணபதி.



# ४. वीरगणपतिः

## 4. வீரகணபதி:

वेताळशक्तिशरकार्मुकचर्मखड्ग-
खट्वांकमुद्गरगदांकुशनागपाशान् ।
शूलं च कुन्तपरशुध्वजमुद्वहन्तं
वीरं गणेशमरुणं सततं स्मरामि ॥

**வேதால்லஶக்திஶரகார்முக சர்மகட்க**
**கட்வாம்கமுத்கர கதாம்குஶநாகபாஶாந் ।**

**ஶூலம் ச குந்தபரஶுத்வஜமுத்வஹந்தம்**
**வீரம் கணேஶமருணம் ஸததம் ஸ்மராமி ॥**

4. தமது பதினாறு கைகளில் முறையே வேதாளம், வேல், அம்பு, வில், சக்கரம், கத்தி, கேடயம், சம்மட்டி, கதை, அங்குசம், நாகம், பாசம், சூலம், குந்தம், மழு, கொடி இவைகளைத் தாங்கி வீரஸ்வரூபத்துடன் சிவந்த திருமேனியுடையவராக விளங்குகிறவர்.

– வீர கணபதி.



## ५. शक्तिगणपति:

## 5. ஶக்தி கணபதி:

आलिंग्य देवीं हरितां निषण्णम्
परस्परस्पृष्टकटौ निवेशम् ।
संध्यारुणं पाशसृणिं वहन्तं
भयापहं शक्तिगणेशमीडे ॥

ஆலிங்க்ய தேவீம் ஹரிதாம் நிஷண்ணம்
பரஸ்பரஸ்பிருஷ்டகடௌ ந்வேஶம் ।
ஸம்த்யாருணம் பாஶஸ்ம்ருணிம் வஹந்தம்
பயாபஹம் ஶக்தி கணேஶமீடே ॥

5. நான்கு கைகளில் ஒரு கை, மக்களுக்கு பயம் நீங்க புரியும் அபயஹஸ்தம். மற்ரொரு கையில் பாசக்கயிறு, மூன்ருவது கையில் புஷ்பமாலே/ நான்காவது கை, பச்சை நிறமேனியுடன் விளங்கும் அம்பிகையை அணேக்கும் திருக்கோலம் இவைகளுடன் அஸ்தமிக்கும் சூரியனுடைய செந்நிறத்துடன் விளங்குபவர்.

– சக்தி கணபதி.



## ६. ध्वजगणपतिः

## 6. த்வஜ கணபதி:

यः पुस्तकाक्षगुणदण्ड कमण्डलुश्री--
निर्वृत्यमान करभूषणमिन्दुवर्णम् ।
स्तम्वेरमाननचतुष्टयशोभमानं
त्वं संस्मरेत् ध्वजगणाधिपते स धन्यः ॥

ய: புஸ்தகாக்ஷகுணதண்ட கமண்டலுஸ்ரீ--
நிர்வ்ருத்யமாந கரபூஷணமிந்துவர்ணம் ।
ஸ்தம்போரமாநந சதுஷ்டயசோபமாந் த்வம்
ஸம்ஸ்மரே த்வஜகணாதிபதே ஸ தந்ய: ॥

6. வெண்மையான நான்கு யானை முகங்களையுடையவரும் நான்கு கைகளில் புஸ்தகம், ருத்ராக்ஷ மாலை, தண்டம், கமண்டலம், இவைகளை ஏந்திய மின்னர் கொடி போல் ஒளிக்கின்ற கை வளையல்களைத் தரித்தவர்.

– த்வஜ கணபதி.



## ७. पिङ्गळगणपतिः

## 7. பிங்கள கணபதி:

पक्वचूतफलकल्पमञ्जरी--
मिक्षुदण्डतिलमोदकैस्सह ।
उद्वहन्परशुहस्त ते नमः
श्रीसमृद्धियुत देवपिङ्गल ॥

பக்வசூதபலகல்பமஞ்ஜரீ--
மிக்ஷுதண்டதிலமோதகைஸ்ஸஹ ।
உத்வஹந்பரஶுஹஸ்த தே நம:
ஶ்ரீஸம்ருத்தியுத தேவபிங்கள ॥

7. நான்கு கைகளில் முறையே மாம்பழம், பூங்கொத்து, கரும்புத்துண்டு, பரசு, துதிக்கையில் எள்ளுருண்டையும் வைத்துக்கொண்டு பொன் கலந்த பசுமை நிறமுடையவர்.

– சித்தி அல்லது பிங்கள கணபதி.



## ८. उच्छिष्टगणपतिः

## 8. உச்சிஷ்ட கணபதி:

नीलाब्जं दाडिमीवीणाशालीगुंजाक्षसूत्रकम् ।
दधदुच्छिष्टनामायं गणेशः पातु मोक्षदः ॥

நீலாப்ஜம் தாடிமீவீணாஶாலீகுஞ்ஜாக்ஷஸூத்ரகம் ।
தததுச்சிஷ்டநாமாயம் கணேஶ: பாது மோக்ஷத: ॥

8. தனது ஆறு கரங்களிம் முறையே, நீலோத்பலம், மாதுளை, வீணை, நெற்கதிர், ருத்ராக்ஷ மாலை, கயிறு இவைகளைத் தரித்து நீல வர்ண மேனியுடன் விளங்குபவர்.

– உச்சிஷ்ட கணபதி.



## ९. विघ्नराज गणपतिः

## 9. விக்னராஜ கணபதி:

पाशांकुशस्वदन्ताम्रफलवानाखुवाहनः ।
विघ्नं निहन्तु नस्सर्वं रक्तवर्णो विनायकः ॥

பாஶாங்குஶஸ்வதந்தாம்ரபலவாநாகுவாஹந: ।
விக்னம் நிஹந்து நஸ்ஸர்வம் ரக்தவர்ணோ விநாயக: ॥

9. ரத்தத்தையொத்த வர்ணமுடையவர், தனது நான்கு கைகளிலும் பாசக்கயிறு, அங்குசம் என்னும் ஆயுதம், தந்தம், மாம்பழம் இவைகளை வைத்துக் கொண்டிருப்பவர்.

– விக்ன ராஜ கணபதி.



## १०. क्षिप्र गणपतिः

## 10. க்ஷிப்ர கணபதி:

दन्तकल्पलतापाश रत्नकुम्भांकुशोज्जवलम् ।
बन्धूककमनीयाभं ध्यायेत् क्षिप्रगणाधिपम् ॥

தந்தகல்பலதாபாஶ ரத்னகும்பாங்குஶோஜ்வலம் ।
பந்தூககமநீயாபம் த்யாயேத் க்ஷிப்ர கணாதிபம் ॥

10. நான்கு கைகளில் தந்தம், கொடி, பாசம், அங்குசம், துதிக்கையில் ரத்ன கும்பம் இவைகளை ஏந்தி செம்பருத்திப் புஷ்பம் போன்ற அழகிய திருமேனியை உடையவர்.

– க்ஷிப்ர கணபதி.



# १३. महा गणपति:

## 13. மஹா கணபதி:

कल्हारांवुजवीजपूरकगदादन्तेक्षुवाणैस्तदा
विभ्राणो मणिकुम्भशालिकलशौ पाशं च चक्रान्वितम् ।
गौरांग्या रुचिरारविन्दकरया देव्या सदा संयुत:
शोणाङ्गश्शुभमातनोतु भगवान् नित्यं गणेशो महान् ।।

**கல்ஹாராம்புஜபீஜபூரககதா தந்தேக்ஷுபாணஸ்ததா**
**விப்ராணோ மணிகும்பசாலிகலசௌ பாசம் ச சக்ரான்விதம் ।**
**கௌராங்க்யா ருசிராரவிந்தகரயா தேவ்யா ஸதா ஸ்யுத:**
**சோணாங்கச்சுபமாதனோது பகவான் நித்யம் கணேசோ மஹான் ।।**

13. தனது பத்து கரங்களில் மாதுளை, கதை, கரும்பு, தாமரை, நீலோத்பலம், நெற்கதிர், வில், சக்கிரம், பாசம், தந்தம், இவைகளை, ஏந்தி துதிக்கையில் ரத்ன கும்பத்துடனும், மடிமீது அமர்ந்துள்ள தேவியுடனும் முக்கண்களுடன் காக்ஷியளிப்பவரே.

– மஹா கணபதி.



## १४. भुवनेश गणपति:

## 14. புவநேஶ கணபதி:

शंखेक्षुचापकुसुमेषुकुठारपाश—
चक्रांकुशै: कलसमंजरिकागदाद्यै:।
पाणिस्थितै: परिसमाहितभूषणश्री—
र्विघ्नेश्वरो विजयते तपनीयगौर: ॥

ஶங்கேக்ஷுசாபகுஸுமேஷுகுடாரபாஶ—
சக்ராம்குஶைள கலஸமம்ஜரிகாகதாத்யை: ।
பாணிஸ்திதை: பரிஸமாஹிதபூஷணஶ்ரீ—
விந்திஶ்வரோ விஜயதே தபனீயகௌர: ॥

14. தனது பத்து கைகளில் சங்கம், கரும்பின் வில், புஷ்பபாணம், கோடாரி, பாசம், சக்கரம், கொம்பு, மாலை, புஷ்பக்கொத்து, பாணம் இவைகளை ஏந்தி ஏராளமாக ஆபரணங்களை தரித்து பொன்னைப்போன்ற திருமேனியை உடையவர்.

– புவனேச கணபதி.



## १५. नृत्त गणपतिः

## 15. ந்ருத்த கணபதி

पाशाङ्कुशापूपकुठारदन्त—
चञ्चत्कराक्लृप्तवरांगुळीयकम् ।
पीतप्रभं कल्पतरोरधस्थं
भजामि नृत्तोपपदं गणेशम् ॥

பாஶாம்குஶாபூபகுடடாரதந்த—
சஞ்சத்கராக்லுப்தவராம்குளியகம் ।
பீதப்ரபம் கல்பதரோரதஸ்தம்
பஜாமி ந்ருத்தோபபதம் கணேஶம் ॥

15. ஒரு காலைத்தூக்கி நர்த்தனம் செய்து கொண்டிருக்கும் இவர் தனது ஆறு கரங்களின் ஒரு கைவிரல்களில் மோதிரங்களை அணிந்து மற்ற ஐந்து கைகளிலும், பாசம், அங்குசம், கொழுக்கட்டை, கோடாரி, ஒடிந்த தந்தம், இவைகளைப்பற்றி கர்ப்பக மரத்தடியில் வாசம் செய்பவர்.

– ந்ருத்த கணபதி.



## १६. ऊर्ध्व गणपतिः

## 16. ஊர்த்வ கணபதி:

कल्हारशालिकमलेक्षुचापवाण—
दन्तप्ररोहकगदी कनकोज्ज्वलाङ्गः ।
आलिङ्गनोद्यतकरो हरिताङ्गयष्ट्या
देव्या दिशत्वभयमूर्ध्वगणेश्वरो मे ॥

கல்ஹாரஶாலிகமலேக்ஷுசாபபாண—
தன்தப்ரரோஹககதீ கனகோஜ்வலாங்க: ।
ஆலிங்கநோத்யதகரோ ஹரிதாங்கயஷ்ட்யா
தேவ்யா திஶத்வபயமூர்த்வகணேஶ்வரோ மே ॥

16. தனது ஆறு கரங்களில், நீலவர்ணபுஷ்பம், நெற்கதிர், தாமரை, கரும்பினுல் வளைக்கப் பெற்ற வில், பாணம், தந்தம் (ஒடிந்தது) இவற்றை ஏந்தி, பொன்னிற தேகத்துடன், பச்சைநிற மேனியுடன் கூடிய தேவியைத் தழுவிக் கொண்டிருப்பவர்.

– ஊர்த்வ கணபதி.

इति विरचितं गणेशमूर्तिं
ध्यानपरं स्तवमागमात्तसारम् ।
पठति सततं गणेशं भक्त्या
त्रिजगति तस्य न किञ्चिदप्यलभ्यम् ॥

॥ शुभमस्तु ॥

இதி விரசிதம் கணேஶமூர்திம்
த்யானபரம் ஸ்தவமாகமாத்தஸாரம் ॥
படேதி ஸததம் கணேஶம் பக்த்யா
த்ரிஜகதி தஸ்ய ந கிஞ்சிதப்யலப்யம் ॥

॥ சுபமஸ்து ॥



உ
शिवमयम्

# ।। श्री स्कन्द षोडश नामानि ।।

।। कुमारतन्त्र आगमे ।।

ஷோடச சுப்ரமண்யஸ்வாமி த்யானுர்தம்

(குமார தந்திர ஆகமப்படி)

ज्ञानशक्तिधरस्कन्दः देवसेनापतिस्तथा ।
सुब्रह्मण्योगमारूढः शरकाननसंभवः ।। १

ஞானஶக்திதரஸ்ந்த: தேவஸேநாபதிஸ்ததா ।
ஸுப்ரஹ்மண்யோகமாருட: ஶரகாநநஸம்பவ: ॥ 1

कार्तिकेयः कुमारश्च षण्मुख स्तारकान्तकः ।
सेनानीर्ब्रह्मशास्ताच वल्ली कल्याण सुन्दरः ।। २

கார்த்திகேய: குமாரஶ்ச ஷண்முகஸ்தாரகாந்தக:।
ஸேநாநீ ப்ரஹ்மஶாஸ்தாச வல்லீ கல்யாண சுந்தர:॥2

बालश्च क्रौञ्च भेत्ताच शिखिवाहन ए वच ।
एतानिस्कन्द नामानि षोडशप्रत्यनन्तरः ।। ३

பாலஶ்ச க்ரௌஞ்ச பேக்தா ச ஶிகிவாஹந ஏவச ।
ஏதானி ஸ்கந்த நாமானி ஷோடஶப்ரத்யன்தர: ॥ 3

यः पठेत् सर्व पापेभ्यः सुमुच्यते समहामुने ।
एतेषां प्रतिरूपाणां ध्यान भेद इहोच्यते ।। ४

ய:படேத் ஸர்வபாபேப்ய: ஸமுச்யதே ஸமஹாமுநே ।
ஏதேஷாம் ப்ரதிருபாணும் த்யான பேத இஹோச்யதே ॥



## १.शक्तिधर स्वामि ध्यानम्

## 1. சக்தி தர ஸ்வாமி த்யானம்

एकास्यं द्विभुजं वामे वज्रं दक्षिणजे करे ।
इच्छा ज्ञानक्रियाशक्ति रूपं शक्तिधरं भजे ॥

ஏகாஸ்தம் த்விபுஜம்வாமே வஜ்ரம் தக்ஷிணஜேகரே ।
இச்சா, ஞான, க்ரியா ஶக்தி ரூபம் ஶக்திதரம் பஜே ॥

ஒரு முகமும் இரண்டு கைகளும் உள்ளவரும், இச்சா சக்தி, ஞான சக்தி, க்ரியா சக்தி, ரூபமகிய சக்தியாயுதத்தை வலது திருக்கரத்திலும், வஜ்ராயுதத்தை இடது திருக்கரத்திலும், ஏந்தப் பெற்றிருக்கும் சக்தி தரஸ்வாமியை ஸேவிப்போம்.



# २. स्कन्द स्वामि ध्यानम्

## 2. ஸ்கந்த ஸ்வாமி த்யானம்

कल्पद्रुमं प्रणमतां कमलारुणाभम्
स्कन्दं भुजद्वयं अनामयमेकवक्त्रम् ।
कात्यायनी सुतमहं कटिवद्ध दाम
कौपीन दण्डधरण दक्षि हस्तमीडे ॥

கல்பத்ருமம் ப்ரணமதாம் கமலாருணாபம்
ஸ்கந்தம் புஜத்வயம் அநாமயமேக வக்த்ரம் ।
காத்யாயனீ ஸுதமஹம் கடிபத்த தாம கௌபீனம்
தண்டகரே தக்ஷிண ஹஸ்தமீடே ॥

பிரசன்னமான ஒரு முகமும் இரண்டு கரங்களையுடைய வரும், வலது கரத்தில் தண்டம் பிடித்து, இடது கரத்தை இடுப்பில் வைத்து நின்றவரும், செங்கதிரோனைப் போன்றவரும், கௌபீநம் அணிந்தவரும், பார்வதி தேவியின் புத்திரரும் விரும்பியதை அளிக்கும் கற்பக விருக்ஷம் போன்றவரும் ஆகிய ஸ்கந்த ஸ்வாமியை நமஸ்கரிப்போம்.



# ३. सेनापति स्वामि ध्यानम्

## 3. ஸேனாபதி ஸ்வாமி த்யானம்

नाम्यादित्य प्रदीप्तं द्विदशनयनम् षण्मुखं मन्दहासं वामांके
सुस्थितायाः धृतसरसि रुहालिंगितायाः प्रियायाः ।
उत्तुङ्गोरुस्तनाग्रे विहितकरतलम् भीतिखंटञ्च शूलं ह्रादि
न्युद्दीप्त शक्ती व्वसनधनगदाकुक्कुटाब्जेषु हस्तम् ।।

நௌம்யாதித்ய ப்ரதீப்தம் த்விதஶநயனம்
ஷண்முகம் மந்தஹாஸம் வாமாங்கே ஸுஸ்திதாயா:
த்ருத ஸரஸி ருஹாலிங்கிதாயா: ப்ரியாயா: ।
உத்துங்கோருஸ்தநாக்ரே விஹிதகரதலம்
பீதிகண்டஞ்ச ஶூலம் ஹ்த்ராதின்யுத்தீப்த ஶக்தி
வ்வஸநதநகதா குக்குடாப்ஜேஷு ஹஸ்தம் ।।

புன்னகை தவழகின்ற ஆறுமுகமும் பண்ணிரு கண்களுமுள்ள சூரிய பிரகாசம் போன்ற மேனியரும் கையில் தாமரை மலர் பிடித்து, மற்றொரு கையில் தழுவப்பெற்ற மனைவியை இடது துடைமீது வைத்திருப்பவரும் அனைத்த கரமும், அபயகரமும், கேடயம், கத்தி, சூலம், வஜ்ரம், சக்தி, பாணம், வில், கெதை, கோழி, தாமரை மலர், தரித்த கரங்களை உடையவரும் ஆகிய ஸேனாபதி ஸ்வாமியை வணங்குகிறேன்.



# ४. सब्रह्मण्य स्वामि ध्यानम्

## 4. சுப்ரமண்ய ஸ்வாமி த்யானம்

सिन्दूरारुणमिन्दुकान्तिवदनं केयूरहारादिभिः
दिव्यैराभरणैर्विभूषित तनुं स्वर्गादि सौख्यप्रदम् ।
अंभोजाभयशक्तिकुक्कुटधरं रक्ताङ्गरागांशुकं
सुब्रह्मण्यमुपास्महे प्रणमतां भीतिप्रणाशोद्यतम् ॥

ஸிந்தராருணமிந்துகாந்தி வதனம் கேயூரஹாராதிபி:
திவ்யைராபரணைர்விபூஷித தநும்
ஸ்வர்காதி ஸௌக்யப்ரதம் ।

அம்போஜாபய ஶக்தி குக்குட தரம் ரக்தாங்கராகம்ஶுகம்
சுப்ரஹ்மண்யமுபாஸ்மஹே ப்ரணமதாம்
பீதி ப்ரணாசோத்யதம் ॥

செம்மதியின் ஒளி போன்ற முகம், தோள்வளை, முத்து மாலை, முதலிய திவ்யாபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட சரீரம் உள்வரும், சுகத்தை அருள்பவரும், தாமரை, அபயம், சக்தி, கோழி இவற்றை நான்கு திருக்கரங்களில் தாங்கி சென்னிற ஆடைத் தரித்திருப்பவரும் பயத்தைப் போக்குபவரும் ஆகிய சுப்ரமண்ய ஸ்வாமியை உபாசிப்போம்.



# ५. गजवाहन स्वामि ध्यानम्

## 5. கஜ வாஹந ஸ்வாமி த்யானம்

एकाननं द्विनयनं वरकुक्कुटौ च
वामद्वये निशितशक्त्यभयद्वयञ्च ।
विभ्राणमीश्वरसुतं तपनायुताभं
नित्यं नमामि गजवाहन मिष्टसिद्धये ॥

ஏகாநநம் த்வினயனம் வரகுக்குடௌச
வாமத்வயே நிஶித ஶக்த்யபயத்வயஞ்ச ।
பிப்ராணமீஶ்வர ஸுதம் தபநா யுதாபம்
நித்யம் நமாமி கஜவாஹன மிஷ்டஸித்யை ॥

ஒரு முகமும், இரு கண்ணுள்ளவரும், விரதம், குக்குடம், இடது கரத்திலும், சக்தி அபயம், வலது கரத்திலும் ஏந்தி கோடி சூர்ய ப்ரகாசம் உள்ளவரும், சிவனது செல்வக்குமாரரும் யானையின் மீது இருப்பவரும், வேண்டப்பட்ட வரையிருள்கின்ற வருமாகிய கெஜ வாஹந ஸ்வாமியை வணங்குகிறேன்.



# ६. शरवणभव स्वामि ध्यानम्

## 6. சரவண பவ ஸ்வாமி த்யானம்

शक्ति घण्टां ध्वजसरसिजे कुक्कुटं पाशदण्डौ
टांकं वाणं वरदमभयं कार्मुकञ्च उद्वहन्तम् ।
पीतं सौभ्यं द्विदशनयनं देव संघैरुपास्यं
सद्भिः पूज्यं शरवणभवं षण्मुखं भावयामि ।।

ஶக்திம் தண்டாம் த்வஜஸரஸிஜே குக்குடம் பாஶ
தண்டௌ டங்கம் பாணம் வரதமபயம் கார்முகஞ்ச உத்வஹந்தம்!
பீதம் ஸேளம்யம் த்விதஶநயனம் தேவ ஸம்தைருபாஸ்யம்
ஸத்பி: பூஜ்யம் ஶரவணபவம் ஷண்முகம் பாவயாமி ।।

சாந்தமுள்ள ஆறு முகமும் பன்னிறு கண்களும், பொன்னிற மேனியும், சக்தி, மணி, துவஜம், தாமரை, குக்குடம், பாசம், தெண்டம், மழு, பாணம், விரதம், அபயம், வில், இவைகளைத் தாங்கிய, பன்னிறு திருக்கரங்களுடன் விளங்குபவரும், தேவ கணங்களால் வழிபடத் தக்கவரும் சாதுக்கால் சேவிக்கப்பட்டவருமாகிய சரவணபவரை வணங்குகிறேன்.



# ११. सेनानी स्वामि ध्यानम्

## 11. ஸேநானி ஸ்வாமி த்யானம்

अभयमसिरथाङ्गञ्चांकुशं शक्ति शूलं
वरद कुलिशपाशं पद्मदण्डौ गदाञ्च ।
दधताभयपक्षद्वादशाया: अहस्तै:
द्विदशकमलनेत्रं देवसेनान्यमीडे ॥

அபயமஸி ரதாங்கஞ்சாம் குஶம் ஶக்தி
ஶூலம்வரத குலிசபாசம் பத்மதண்டா கதாஞ்ச ।
தததா பய பக்ஷத்வதஶாயா: அஹஸ்தௌ:
த்விதஶகமலநேத்ரம் தெவஸேநாந்யமீடே ॥

ஆறு திருவதனங்களும், ஈராறு விழிகளும்,அபயம், கத்தி, சக்ரம், அங்குசம், சக்தி, சூலம், வரதம், வஜ்ரம், பாசம், பத்மம், தெண்டம், கெதை என்பன இருபக்கத்திலும் ஆக தாங்கா நின்ற திருக்கரங்கள் பன்னிரெண்டும் பிரகாசிக்க தேவசேனைகளுக்கு தலைவரான ஸேநாதி மூர்த்தியை துதிப்போம்.



## १२. व्रह्मशास्त्ृ स्वामि ध्यानम्

## 12. ப்ரஹ்ம சாஸ்த்ரு ஸ்வாமி த்யானம்

राग़े क्ररेच युगले वरकुण्डिकेच
सव्येक्षसूत्रमभयं दधतं विशाखी ।
वल्या युतं वनजलोच्चनमेकवक्रं
वन्दामहे वनजसंभवशासितारम् ।।

ரோகேகரேச யுகலே வரகுண்டிகேசஸவ்யேக்ஷஸூத்ர
மபயம் தததம் விசாகீ ।
வல்யாயுதம் வனஜ லோசன மேகவக்தம் வந்தாமஹே
வனஜ ஸம்பவ ஶாஸிதாரம் ।।

தாமரை மலர் போன்ற கண்கள் உள்ள ஒரு திருமுகமும், வரதம், கமண்டலம், இரண்டும் இடத்திருங்கரங்களில் பொருந்தவும், அபயம், அக்ஷவடம் என்பன வலத்திருக்கரங்களில் பொருந்தவும் அடைந்த நான்கு திருக்கரங்களும், வனஜயாகிய வல்லீ என்னும் சக்தியை உடையவரும், நான்முகருக்கு ஆசிரியரும் விசாகர் என்று அழைக்கப் பெற்றவருமாகிய ப்ரஹ்ம சாஸ்த்ரு ஸ்வாமியை வணங்குவோம்.



# १३. वल्ली कल्याण सुन्दर स्वामि ध्यानम्

## 13. வல்லீ கல்யாண ஸுந்தரஸ்வாமி த்யானம்

हस्तद्वंद्वेऽक्षमालां अभयमपिधृतं कुण्डिकाश्रोणिवन्धं
सव्ये वामे निषण्णं स्त्रुवधृत विधिना द्यमानेनम्तम् ।
सर्वालंकारयुक्तं जलकलशधृतं विष्णुनाचारुणाभं
वल्ली कल्याणमूर्तिं सकलसुरगणैः स्तूयमानं प्रपद्ये ॥

ஹஸ்த்வந்த்வேக்ஷமாலாம் அபயமபித்ருதம்
குண்டிகாஶ்ரோணிபந்தம் ஸவ்யே வாமே நிஷண்ணம்
ஸ்ருவத்ருதவித்திா தூயமாநேனம்நதம் ।

ஸர்வாலம்காரயுக்தம் ஜலகலஶத்ருதம்
விஷ்ணுநாசாருணபம் வல்லீகல்யாணமூர்த்திம்
ஸகலசுரகணை: ஸ்தூயமானம் ப்ரபத்யே ॥

வலத் திருக்கரங்களிரண்டிலும் முறையே அபயமாகவும், உருத்திராக்ஷமாலையை ஏந்தியதாகவும், இடத் திருக்பரங்களில் ஒன்று இரக்த்தின கும்பத்தை (கமண்டலம்) ஏந்தி நிற்கவும், மற்றொன்று இருப்பினடத்தே பொருந்தவும் தெய்வத் திருவெல்லாம், திரண்டாற் போலும், வள்ளியம்மையின் வலது பக்கம் விளங்கா நிற்கவும், சர்வ அலங்காரம் உடையவராய் (மாமஞெகிய திருமால்) திருள் (மகட் கொடுத்தேன் ஏற்றருள்க என்று)



# १४. वालस्वामि ध्यानम्

## 14. பால ஸ்வாமி த்யானம்

वालपद्मासव्यकटिसंयुतं वामं पद्मकान्तिनिभमेकमुखञ्च ।
वालवृद्धिकरमीश्वर सूनुं वलमुन्नतभुजं प्रणतोऽस्मि ॥

பாலபத்மாஸவ்யகடிஸம்யுதம் பத்மகாந்திநிபமேகமுகஞ்ச ।
பாலவ்ருத்திகரமீஶ்வர ஸூனும்பாலமுன்னதபுஜம்
ப்ரணதோऽஸ்மி ॥

திருவரையினடத்தே இடக்கையை வைத்தருளி கமலக்தை வலக்கையிலேந்தி தாமரை மலர் நிறத்தை யொத்த ஒரு திருமுகமும் வலிமை பொருந்திய இரு தோளும் விளங்க இறைவனரது அருமை மைந்தரும் சந்தான வ்ருத்தியை செய்தருளும் பால ஸ்வாமியை நமஸ்கரிக்கின்றேன்.



## १५. क्रौञ्च भेदन स्वामि ध्यानम्

## 15. க்ரௌஞ்ச பேத ஸ்வாமி த்யானம்

अभयशितकृपाणौ शक्ति बाणौ:च सव्यै:
वरद कुलिशचापं खेटकं चान्य हस्तै: ।
दधतममर सेनानायकं चाष्टवाहुं
कमलवदनषट्कं क्रौञ्चभेत्तारमीडे ॥

அபயஶித க்ருபாணௌ ஶக்தி பாணௌச ஸவ்யை:
குலிஶசாபம் கேடகம் சாந்ய ஹஸ்தை: ।
தததமமரஸேநாநாயகம் சாஷ்டஹூம்
கமலவதனஷட்கம் க்ரௌஞ்சபேத்தாரமீடே ॥

ஆறுதிருமுகங்களும், பன்னிறு விழிகளும், அபயம், கத்தி, சக்தி, பாணம், என்பவையமைந்த வலத் திருக்கரங்கள் நான்கும், வரதம், வஜ்ரம், வில், கேடகம் இவை கொண்ட இடத்,ருக்கரங்கள் நான்கும் உடைய அமர சேனநாயகரான க்ரௌஞ்சபேத ஸ்வாமியைப் போற்றுவோம்.



## १६. शिखिवाहन स्वामि ध्यानम्

### 16. சிகிவாஹன ஸ்வாமி த்யானம்

विद्रुमप्रभमेकमुखंविभुं वज्रशक्ति वरदाभयपाणिम् ।
देवलोकरिपुघ्नमविघ्नदम् युग्मशक्ति सहितं शिखिवाहनम् ।।

வித்ருமப்ரபமேகமுகம்விபும்
வஜ்ரசக்திவரதாபயபாணிம் ।
தேவலோகரிபுக்னம் மவிக்னதம்
யுக்மசக்தி ஸஹிதம் ஶிகிவாஹனம் ।।

வஜ்ரம், சக்தி, வரதம், அபயம் கொண்ட திருக்கரங்கள் நான்கும் ஒரு முகமும் பவழ நிறத்தை யொத்த திருமேனியும் தேவர்களுக்கு இஷ்டத்தை அருள்செய்பவரும் ருத்ரரிடம் தோன்றியவரும் மயில் வாஹநத்தில் வீற்றிருப்பவருமாகிய சிகிவாஹந ஸ்வாமியை நமஸ்கரிக்கின்றேன்.

ஸ்ரீ காமாக்ஷ்யை நம:

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# ராமேச்வர ஸ்ரீ சங்கர மண்டபம்



ஸகல விக்ன நிவர்த்தக சங்கர
 ப்ரியஸுத ப்ரணதார்த்திஹரப்ரபோ |
மம ஹ்ருதம்புஜ மத்ய லஸன்
 மணீரசித மண்டப வாஸரதோபவ ||

தூரீக்ருத ஸீதார்த்தி: ப்ரகடீக்ருத
 ராம வைபவ ஸ்பூர்த்தி: |
தாரித தசமுக கீர்த்தி:
 புரதோ மம பாது ஹனுமதோ மூர்த்தி: ||

அழுந்தொறும் அணைக்கும் அன்னை
 அறிவிலாது ஓடி ஓடி
விழுந்தொறும் எடுக்கும் அப்பன்
 விளையாடும்போது தோழன்
தொழுந்தொறும் காக்கும் தெய்வம்
 சொந்தமாய் எடுப்போர்க்கெல்லாம்
குழந்தை - இப்படி உலாவும்
 குருநாதன் வாழி, வாழி!

இமயம் முதல் கன்யாகுமரி வரையில் உள்ள எல்லா ஆஸ்திகர்களும் அநேகமாய் வாழ்நாளில் ஒரு முறையாவது ராமேச்வரம் வந்து தரிசித்து ஸ்நானம் செய்யாமல் இரார். ராமேச்வர க்ஷேத்ரம் நான்கு ஆம்னாயங்களில் ஒரு ஆம்னாய க்ஷேத்ரமாகச் சொல்

லப்பட்டிருக்கிறது. ஸ்ரீசங்கர பகவத் பாதர்கள் பாடி யிருக்கும் த்வாதச ஜோதிர்லிங்க க்ஷேத்ரங்களில் தெற்குக் கோடியிலிருக்கும் ராமநாத லிங்கத்தின் க்ஷேத்ரமாக விளங்குகிறது ராமேச்வரம். "சார் தாம்" என்று சொல்லப்படும் நான்கு ஸ்தானங்களி லும் ஒன்ருக இருக்கிறது ராமேச்வரம். இந்த க்ஷேத் ரத்தில் அக்னி தீர்த்தக் கரையில் சுமார் 50 அடி உயரத்தில் நான்கு சிஷ்யர்களுடன் சலவைக்கற்க ளில் தயார் செய்யப்பட்ட ஸ்ரீ ஆதிசங்கர மூர்த்தி யின் மண்டப விமானம் ஒன்று அமைக்கப்பட்டிருக் கிறது. ஸ்ரீ ஆசார்யாள் அமர்ந்திருக்கும் பீடம் பூமியிலிருந்து 25 அடி உயரத்தில் உள்ளது. இந்த விமானத்திற்கு முன்பு கிழக்குப்பக்கத்தில் ஸ்ரீ ஆஞ்ச நேயர் ஆலயமும் அவரது இருபுறங்களிலும் (1) ஹிம யத்திலுள்ள கேதாரேச்வரர், (2) ஸௌராஷ்டிர சோமநாதர், (3) உஜ்ஜயினி மஹாகாளேச்வரர், (4) காசி விச்வநாதர், (5) பரளி வைத்தியநாதர், (6) டாகினி பீமேச்வரர், (7) ஔண்டு நாகேசர், (8) நர்மதா ஓங்காரேச்வரர், (9) எல்லோரா குஸுரு ணேசர், (10) கௌதமீ தடத்தில் த்ரயம்பகேச்வரர், (11) ஸ்ரீசைல மல்லிகார்ஜுனர், (12) ராமேச்வர ராமநாதர் ஆகிய ஆதிசங்கரரால் பாடப்பெற்ற பன் னிரண்டு மஹாலிங்கங்களின் கர்ப்ப கிரஹங்கள் சிறிய அளவில் அந்தந்த க்ஷேத்ரத்தில் உள்ள விமானசில்பப்படியே சிறு விமான சித்ரங்களுடன் அமைக்கப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீ ஆதிசங்கரரின் விமானத்தைச் சுற்றிலும் ஜனகமஹாராஜா-யாக்ஞவல்க்யர், சனத்குமாரர்-நார

தர், ரைக்வ முனிவர், யமதர்மராஜா-நசிகேதஸ், சூதமாமுனிவர், நாரதர்-த்ருவர், ஜடபரதர், ப்ரஹ்லாதர், ஸப்த ரிஷிகளுடன் வேட வால்மீகி, குசலவர்களுடன்-வால்மீகி முனிவர், ஸனத்ஸுஜாதர், பீஷ்மர் தர்மபுத்ரர், தர்மவியாதர், வாசஸ்பதிமிச்ரர், வித்யாரண்ய முனிவர், அப்பய்ய தீக்ஷிதர், மதுஸூதன ஸரஸ்வதி, கபீர்தாஸ், ஜயதேவர், போதேந்த்ராள், சதாசிவபிரம்மம், தியாக பிரம்மம், பட்டிணத்தார்-பத்ரகிரியார், சசிவர்ண போதர், சைதன்ய மஹாபிரபு, துளசிதாஸ், சிலைச் செதுக்கங்களும் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன.

மற்றும் அங்கே விமானத்திற்குப் பின்பக்கத்தில் ஒரு நூல் நிலையமும், வெண்சலவைக் கல்லில் ஸரஸ்வதி மூரத்தியும் ப்ரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. ஸரஸ்வதி கர்ப்ப கிரஹத்தைச் சுற்றி (1) விநாயகர் துதிக்கையில் விளங்கும் ஔவையார், (2) கண்ணகி (3) வள்ளுவரின் வாசுகி, (4) அருந்ததி, (5) அனுசூயை, (6) அகஸ்தியரின் லோபாமுத்திரையாம் காவேரி, (7) மண்டோதரி, (8) ஸீதையுடன் திரிசடை, (9) சபரி, (10) சந்திரமதி, (11) தமயந்தி, (12) கணவன் உலகைப்பார்க்க முடியாமல் இருந்ததால் தன் கண்ணைக் கட்டிக் கொண்ட காந்தாரி, (13) ஆதிசங்கரரின் தாயார் ஆர்யாம்பிகை, (14) நெல்லிக்கனி கொடுத்த கனகதாரை, (15) மண்டன மிச்ரரின் பத்னி ஸரஸவாணி, (16) கொக்கென நினைத்தாயோ கொங்கணவா என்று கடிந்த பார்ப்பனி, (17) நளாயினி, (18) ஸாவித்ரி, (19) ச்யவனரின் ஸுகன்யை, (20) திலீப மஹாராஜனின் சுதக்ஷிணை, (21) துளசி

யைத் தராசில் வைத்துக் கண்ணனை மீட்ட ருக்மிணி ஆகிய இந்தப் புண்யவதிகளின் மூர்த்திகளைச் சிலை செதுக்க முறையில் தயாரித்துப் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது.

நூல் நிலையத்தின் வாசற்பக்கத்தில் அஷ்ட கோண வடிவத்தில் ஒரு சிறு விநாயகர் ஆலயம் விமானம் உள்பட பூர்த்தியாய்க் கருங்கல்லினால் எழுப்புவித்து அவ்வாலயத்திலுள்ள வெளிச்சுவரில் த்யான சுலோகங்களின்படி 16 வகையான விநாயக மூர்த்திகளையும் உருவாக்கிப் பதிப்பிக்க ஏற்பாடாகியிருக்கிறது.

மேல் கண்டபடி இந்தச் சங்கர மண்டபத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும் சில்பங்களைப் பற்றி ஒரு சிறு குறிப்பு எழுதவேண்டுமென்று ஸ்ரீ மஹாஸந்நிதானத்தில் உத்திரவானதைச் சிரமேற்கொண்டு ஏதோ எனக்குத் தெரிந்ததை எழுதுகிறேன். குற்றங்களிருப்பின் பொறுத்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

---

## I. ஆஞ்ஜநேயர்

மண்டபத்தில் நுழைந்ததும் ஆஞ்ஜநேயர் ப்ரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறார். இவர் தன் வலது கையை மேல்நோக்கி வைத்துக் கொண்டிருக்கிறார். சமுத்ரத்தை "இததுடன் நில். இனி உள்ளே வந்து மக்களுக்கு ஓர் வித ஹிம்சையை உண்டாக்காதே" என்று சமுத்ரத்தைத் தடுப்பதற்காகவே அவர் அப்படிக் கையைத் தூக்கிக் கொண்டிருக்கிறார் என்று பரம்பரையாகப் பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

---

## II. துவாதச லிங்கங்கள்

सौराष्ट्रे सोमनाथं च श्रीशैले मल्लिकार्जुनम् ।
उज्जयिन्यां महाकालमोङ्कारममलेश्वरे ॥

परल्यां वैद्यनाथं च डाकिन्यां भीमशङ्करम् ।
सेतुमध्ये तु रामेशं नागेशं दारुकावने ॥

वाराणस्यां तु विश्वेशम् त्र्यम्बकं गौतमीतटे ।
हिमालये तु केदारं घुसृणेशं शिवालये ॥

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

### 1. ராமநாதர்

தமிழ் நாட்டிலுள்ள ஜ்யோதிர் லிங்கம் ராமநாதர்; இவர் ராமேச்வரத்திலுள்ள மூர்த்தி. ராமேச்வரம் பாரத தேசத்தில் தென்கோடியிலுள்ள ஒரு தீவு. காசி, ராமேச்வரம் என்று சொல்வது வழக்கம். தேசத்திலுள்ள ஆஸ்திகர்கள் அவர்கள் வாழ்நாளில் ஒரு தடவையாவது இங்குவந்து தரிசிக்காமல் இருக்க மாட்டார்கள். இங்கு தை, ஆடி, மாகாளய அமாவாஸ்யைகள் விசேஷம். சில குறிப்பிட்ட தினங்களில் தவிர மற்ற தினங்களில் ஸமுத்ரஸ்நானம் கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், ராமேச்வரத்தில் எப்போதும் ஸ்நானம் செய்யலாம். **"சேதும் த்ருஷ்ட்வா ஸமுத்ரஸ்ய ப்ரம்மஹத்யாம் வ்யபோஹதி"**. சமுத்திரத்தில் இங்குள்ள சேதுவைத் தரிசித்தால், ப்ரம்மஹத்யாதி மஹா பாபங்களும் தீரும் என்று புராணங்கள் கூறுகின்றன. கங்கா ஸ்நானத்திற்குச் செல்பவர்களெல்

லாம் இங்கிருந்து மண் கொண்டு போய் ப்ரயாகை யில் கங்கையில் போட்டு ஸ்நானங்களை முடித்துக் கொண்டு அங்கிருந்து கங்கை கொண்டுவந்து ராமே ச்வரத்தில் ராமநாதனுக்கு அபிஷேகம் செய்து வைப்பது வழக்கம். இந்த ஸ்தலம் நாயன்மார் களால் பாடப் பெற்றது. இவ்வூரில் அநேக தீர்த் தங்கள் இருக்கின்றன. இவைகளில் முக்கியமானது அக்னி தீர்த்தம, கோடி தீர்த்தம் என்ற ராமநாத ஸ்வாமி கோவிலில் உள்ள ஒரு கிணறு, லக்ஷ்மண தீர்த்தம் என்ற ஒரு குளம், அக்னி தீர்த்தம் என்ற சமுத்திரத்தில் ஒருகட்டம். இவ்வூருக்குநேராக ரயில் போகிறது. இங்குக் கடற்கரையில் அக்னி தீர்த்தக் கரையில் இப்போது ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்வாமிகள் புதிதாய் ஸ்ரீசங்கார் மண்டபம் கட்டி ப்ரதிஷ்டை செய்திருக்கிறார்கள். ராமேச்வரத்திற்குத் தெற்கே 18 மைலில் தனுஷ்கோடி இருக்கிறது.

## 2. மல்லிகார்ஜுனர்

ஜ்யோதிர் லிங்கங்களில் ஒன்றாக உள்ளது ஸ்ரீ சைலக்ஷேத்ரத்திலிருக்கும் மல்லிகார்ஜுனர் மூர்த்தி. அர்ஜுன விருக்ஷம் (மருத மரம்) இவ் வூருக்கு ஸ்தல விருக்ஷமாயிருக்கிறது. இம்மாதிரி மருத மரம் திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள அம்பா சமுத்திரத்திற்கு அருகாமையில் திருப்புடை மருதூர் என்னும் ஸ்தலத்திலும், தஞ்சாவூர் ஜில்லா வில் கும்பகோணத்திற்குச் சமீபத்திலுள்ள திரு விடைமருதூரிலும் ஸ்தல விருக்ஷமாக இருக்கிறது. தேவாரத்தில் இந்த ஸ்தலத்திற்குத் 'திருப்பர்வதம்'

என்று கூறப்பட்டிருக்கிறது. இது மூவராலும் பாடப் பட்டது. நந்தியே பர்வதமாகி ஈச்வரனை தாங்கிக் கொண்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இவ்வூர் அம்பாளுக்கு ப்ரமராம்பிகை என்று பெயர். ஆசார் யாள் 'ப்ரமராம்பாஷ்டகம்' என்று ஒரு ஸ்தோத்ரம் இயற்றியிருக்கிறார்கள்.

"ஸ்ரீ சைலசிகரம் த்ருஷ்ட்வா புனர் ஜன்ம நவித் யதே". (श्रीशैलम् शिखरं दृष्ट्वा पुनर्जन्मं नविद्यते) ஸ்ரீ சைலத்தின் சிகரத்தைக் கண்டவனுக்கு மறுபடி யும் பிறப்புகிடையாது." இந்த லிங்கத்தை லிங்காயத் துகளே அதிகமாகக் கொண்டாடுகிறார்கள். இந்த க்ஷேத்ரம் ஆந்த்ர தேசத்திலுள்ளது. வடப்ராந்தியங் களிலிருந்து வருபவர்கள் ஹைதராபாத்திலிருந்து கர் னூல் சென்று, அங்கிருந்து மோட்டாரில் "ஆத்மகூர" சென்று, அங்கிருந்து ஸ்ரீ சைலம் செல்ல வேணும். பம்பாய் முதலிய மேற்கு ப்ரதேசங்களிலிருந்து வரு பவர்கள் குண்டக்கல் சென்று அங்கிருந்து 'த்ரோ ணசலம்' செல்லும் ரயிலில் சென்று, அங்கிருந்து 'நந்தியால்' போய், அங்கிருந்து 'ஆத்மகூர்' சென்று, ஸ்ரீ சைலம் செல்ல வேண்டும். தென்னட்டிலிருந்து வரும் யாத்ரீகர்கள் பெஜவாடாவிலிறங்கி 'நந்தியால்' சென்று, பெத்தசெருவு என்னுமிடத்திற்குச் சென்று மலை மேல் 70 மைல் செல்ல வேண்டும். சமீபத்தில் ஸ்ரீ சைலத்தில் ஒரு சங்கர மண்டபம் கட்டி அதில் ஆதி சங்கர ப்ரதிஷ்டை செய்ய ஆசார்யாள் ஏற் பாடு செய்து கட்டிடம் வேலையாகிக் கொண்டிருக் கிறது.

## 3. பீமசங்கரர்

ஜ்யோதிர் லிங்கங்களில் ஒன்றான பீம சங்கர மூர்த்தி 'டாகினி' என்னும் க்ஷேத்ரத்தில் இருக்கிறார். இது ஓர் ஆரண்ய மத்தியிலிருக்கிறது. கும்பகர்ணனின் புதல்வனான பீமன் என்னும் ராக்ஷசனைக் கொன்றதினால் இங்குள்ள ஈச்வரனுக்கு பீமேச்வரன் என்னும் பெயர் ஏற்பட்டது. பூனா நதிக்கரையில் 'மாஞ்சர்' என்னுமிடம் சென்று, அங்கிருந்து மலைமீது ஏறிப் போக வேண்டும். காண்டிஷ் என்னும் நகர் சென்று அங்கிருந்தும் மலை ஏறிச் செல்லலாம். 'நேரால்' ஜங்ஷனிலிருந்தும் வரலாம். இப்போது பூனாவிலிருந்து பீமசங்கருக்கு பஸ் செல்லுகிறது. பூனாவிலிருந்து ஜுன்னார் போக, அங்கிருந்து 90 மைல் பீம சங்கரஸ்தலம்.

## 4. வைத்யநாதம்

ஜ்யோதிர் லிங்கங்களில் ஒன்றான வைத்ய நாதம் என்னும் மூர்த்தியைப் பற்றி இரண்டு விதமாய்ச் சொல்லப்படுகிறது. சிவ புராணத்தில் "வைத்ய நாதம் சிதாபூமௌ" என்று சொல்லியிருப்பதை அனுசரித்து பீஹார் மாகாணத்தில் கயா க்ஷேத்திரத்திற்குச் சமீபத்திலுள்ள வைத்தியநாதம் என்பது தான் இந்த க்ஷேத்ரம் என்கிறார்கள். சிலர் "பரள்யாம் வைத்ய நாதம்" என்பதை ஆதாரமாகக் கொண்டு 'பரளி' என்னுமிடத்திலிருக்கும் லிங்கம் தான் ஜ்யோதிர் லிங்கங்களில் ஒன்றான வைத்ய நாதம் என்று சொல்லுகிறார்கள். 'பரளிவைத்யநாத்' என்ற ஸ்டேஷனில் இறங்கி, இங்குச் செல்லலாம்.

## 5. நாகேசர்

ஜ்யோதிர்லிங்கங்களில் ஒன்ருன நாகேசர் 'ஔண்ட்' என்னும் இடத்தில் இருக்கிருர். நாகேசருக்கு நாகநாதர் என்னும் பெயரும் உண்டு. இங்கு ஒரு விசேஷமென்ன வென்ருல் இங்கு கோமுகம் கிழக்கு நோக்கியிருக்கிறது. இவ்விடத்திற்கு 'தாருகாவனம்' என்றும் பெயர் உண்டு. பூர்ணு என்னும் ஜங்ஷனிலிருந்து ஹிங்கோல் போகும் வண்டியிலேறி 'சோண்டி' ஸ்டேஷனுக்குச் சென்று 14 மைல்கள் போக வேண்டும்.

## 6. குஸ்ருணேசர்

ஜ்யோதிர் லிங்கங்களில் ஒன்ருன குஸ்ருணேசர் "விரால்" என்னும் கிராமத்திலிருக்கிருர். சென்ட்ரல் ரயில்வே ஔரங்காபாத் ஸ்டேஷனில் இறங்கி இங்குச் செல்ல வேண்டும். எல்லோராக் குகையிலிருந்து 1 மைல்.

## 7. த்ரயம்பகேச்வரர்

ஜ்யோதிர் லிங்கங்களில் ஒன்ருன த்ரயம்பகேச்வரர் நாசிக்குக்கு ஸமீபத்திலுள்ள கௌதமீதடத்தில் இருக்கிருர். கோதாவரிக்கு இவ்விடத்தில் கௌதமீ என்று பெயர். இந்த இடம் சென்ட்ரல் ரயில்வே நாஸிக்ரோட் ஸ்டேஷனிலிருந்து 20 மைல் தூரத்திலிருக்கிறது.

## 8. ஓங்காரேச்வரர்

ஜ்யோதிர் லிங்கங்களில் ஒன்ருன ஓங்காரேச்வரர் அமலேச்வரத்திலுள்ள மூர்த்தி. இந்த ஊருக்கு

மாந்தாதா என்னும் ஒரு பெயருமுண்டு. இக்ஷ்வாகு வம்சத்தில் கீர்த்தி பெற்ற அரசனான மாந்தாதா சக்ரவர்த்தி ஆண்ட இடமாதலால் இதற்கு மாந்தாதா என்னும் பெயர் வந்தது. இவ்வூர் நர்மதைக் கரையில் உள்ளது, இங்கு 'நர்மதை' ப்ரணவாகாரமாக அமைந்திருக்கிறது. இங்கே கணபதி 5 முகங்களுடன் விளங்குகிறார். உஜ்ஜயினி காண்ட்வா மார்க்கத்திலுள்ள மோர்டக்கா ஸ்டேஷனிருந்து 10 மைல் சென்றால் இந்த க்ஷேத்திரத்தை அடையலாம்.

## 9. சோமநாதர்

இந்தப் பன்னிரண்டு ஜ்யோதிர் லிங்கங்களில் ஒன்றாகச் சொல்லப்படும் சோமநாதர் சௌராஷ்ட்ர (இப்போது குர்ஜரம்) என்னும் தேசத்தில் உள்ள மூர்த்தி. சரித்ரத்தில் ப்ரசித்தி பெற்றது. இங்குள்ள கோவில் இப்போது சில வருஷங்களுக்கு முன் ஒரு கோடி ரூபாய் செலவழித்துப் புதிதாய்த் திருப்பணி செய்யப்பட்டிருக்கிறது. இது கிருஷ்ண பகவான் வேடனால் அடிபட்ட இடமென்று சொல்லப்படுகிறது. மோக்ஷ புரிகளுள் ஒன்றான துவாரகையிலிருந்து சுமார் 250 மைலுக்குள் இருக்கிறது. ஆலயம் இருக்கும் இடத்திற்கு 'ப்ரபாஸ பட்டணம்' என்று பெயர். பம்பாயிலிருந்து வீரமாலுக்குப் படகு செல்லுகிறது. ஆகாய விமானத்தில் போனால் கேஷ்ஹோட் (Kashod) என்னுமிடத்தில் இறங்கி அங்கிருந்து ப்ரபாஸ பட்டணம் செல்லலாம். இப்போது ப்ரபாஸ பட்டணம் ரயில்வே ஸ்டேஷன்.

## 10. மகாகாளேச்வரர்

மகாகாளம் என்பது உஜ்ஜயினியில் உள்ள ஜ்யோதிர் லிங்கத்தின் மூர்த்தி. உஜ்ஜயினிப் பட்டணம் முன்காலத்தில் 'அவந்தி' என்று பெயர் பெற்றிருந்தது; ஆதிசங்கரரால் ஜைனமதத்தி லிருந்து அத்வைத மதத்திற்குக் கொண்டு வரப் பட்ட 'சுதன்வா' என்னும் அரசன் ஆண்ட இடம். இந்த க்ஷேத்ரம் சப்த மோக்ஷ புரிகளில் ஒன்று. இங்குதான் புகழ்பெற்ற விக்ரமாதித்யன் அரசாண் டான். உஜ்ஜயினி ரயில்வே ஜங்ஷன். இந்தூரில் ரயிலேறி சந்த்ராவதி சென்று வண்டி மாறி, அங் கிருந்து 15 மைல் உள்ள உஜ்ஜயினி செல்ல வேண் டும். 'மர்த்யலோகே மகாகாளம் த்ருஷ்டவா முக்திம் அவாப்னுயாத்'' (मर्त्यलोके महाकालम् दृष्ट्वा मुक्तिं अवाप्नुयात्) (இந்த மனுஷ்ய லோகத்தில் மகாகாளரைத் தரி சித்தால் மோக்ஷம் அடையலாம்'' என்கிறது பத்ம புராணம்.

## 11. விச்வேசர்

ஜ்யோதிர் லிங்கங்களில் ஒன்ருன விச்வேசர் காசியில் இருக்கிருர். காசிக்கு 'அவிமுக்தம்' எனவும் 'மகாஸ்மசானம்' எனவும் 'ஆனந்த வனம்' எனவும் பெயர்களுண்டு. இங்கு கங்கை உத்தரவாஹினியா யிருக்கிருள். ஸப்தபுரிகளில் காசி ஒன்று. ''காச் யாந்து மரணுன் முக்தி: (காசியில் இறக்க முக்தி) என்று சொல்லப்பட்டிருக்கிறது. இத் தலத்தின் மகிமையைக் காசி கண்டம் என்னும் 100 அத்தியா

யங்கள் கொண்ட கிரந்தம் விஸ்தாரமாகக் கூறு கிறது. இங்கு கங்கையிலுள்ள அநேக கட்டங் களில் மணிகர்ணிகா கட்டம் மிகவும் முக்கிய மானதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு முக் கியமாய்த் தரிசிக்க வேண்டிய இடங்கள், விச்வேசர், விசாலாக்ஷி, அன்னபூரனி, பிந்து மாதவர், துண்டி விநாயகர், தண்டபாணி, பைரவர்.

## 12. கேதாரேச்வரர்

ஜ்யோதிர் லிங்கங்களில் ஒன்றான கேதாரேச்வ ரர் ஹிமய பர்வதத்திலுள்ள கேதாரத்திலிருக் கிறார். டில்லி சென்று, அங்கிருந்து ஹரித்வாரம் சென்று, ரிஷிகேசத்திலிருந்து ருத்ரப்ரயாகைவரை பஸ் போகிறது. அங்கிருந்து 48 மைல் நடந்தே கேதாரம் செல்ல வேண்டும்.

---

## III. மகான்கள்

(ஸ்ரீ சங்கர மண்டபம் கீழ்வரிசையில் கிழக்கிலிருந்து ப்ரதக்ஷிணமாய்)

### 1. நாரதர் - த்ருவன்

ஸ்வாயம்பு மனுவின் புத்ரனான உத்தான பாதனுக்கு சுநீதி, சுருசி என்று இரு மனைவிகள். அவர்களில் மூத்தவளான சுநீதியின்மகன் த்ருவன். ஒரு சமயம் உத்தானபாதன் இளையவளான சுருசியின் புத்ரனான உத்தமனை மடியில்வைத்துச் சீராட்டிக்



நாரதர்-த்ருவன்

கொண்டிருந்த சமயம் அங்குசென்ற த்ருவன் தானும் அப்படி தகப்பனார் மடியிலேறிச்சீராட்டப்பட வேண்டும் என்று ஆசைப்பட்டான். ஆனால் அச்சமயம் அங்கிருந்த சுருசி "நீ அரசன் மடியில் ஏறவேண்டுமானால், நீ என் வயிற்றில் பிள்ளையாய்ப் பிறக்க வேண்டும்" என்று சொல்ல, அதைக் கேட்ட த்ருவன் தாயான

சுநீதியிடம் சென்று முறையிட. அவள் வருத்தப் பட்டுக்கொண்டு "உன் சிறியதாய் சொன்னது சரி தான். நீ அந்தப் பாக்கியம் பெறவில்லை. நாம் செய்த புண்ணியம் அவ்வளவுதான்; பகவானை ஆராதித்தால்தான் அந்த ஸ்தானம் கிடைக்கும்" என்று சொல்ல, உடனே த்ருவன் "நான் போய்ப் பக வானை ப்ரீதி பண்ணி வைத்து உத்தமமான ஸ்தா னத்தை அடைகிறேன்" என்று காட்டிற்குக் கிளம்பி விட்டான். நடுவழியில் அவனை நாரதர் சந்தித்து அவனுக்கு எவ்வளவோ சொல்லியும் கேளாமல் "எனக்குப் பகவானை சீக்கிரம் அடைய ஒரு வழி சொல் லுங்கள்" என்று கேட்க. "சகல புருஷார்த்தங்களை யும் அடைவதற்கு முக்கியமான சாதனம் ஹரியின் பாதசேவைதான்" என்று சொல்லி, த்ருவனுக்கு 'த்வாதசாக்ஷர மந்த்ரம்' உபதேசித்து பகவானை எப் படித் தியானிக்க வேண்டும் என்பதையும் உபதேசம் செய்கிறார். அவர் சொன்னபடியே செய்து 6 மாதத் தில் த்ருவன் பகவானை ப்ரத்யக்ஷத்தில் தரிசித்து உன்னதமான ஸ்தானத்தை அடைகிறான். நாரதர் த்ருவனுக்கு உபதேசம் செய்வது இங்கு காட்டப் பட்டிருக்கிறது.

## 2. ப்ரஹ்லாதன் - அசுர பாலகர்கள்

ப்ரஹ்லாதன் அசுர ராஜனான ஹிரண்யகசிபு வின் குமாரன். இவன் தாயார் கர்ப்பத்திலிருக்கும் போது ஹிரண்யகசிபு தபஸ் செய்யப் போயிருந் தான். இதுதான் சரியான சமயம் என்று நினைத்து கர்ப்பஸ்த்ரீயாக விருந்த ஹிரண்யகசிபுவின் பத்தி னியை இந்திரன் சிறைப் பிடித்துக்கொண்டு போக,

நாரதர் அவனைத் தடுத்து "இவள் கர்ப்பத்தில் ஒரு மஹா பாகவதோத்தமன் பிறக்கப்போகிறான்" என்று சொல்லி இந்திரனிடத்திலிருந்து அவளை விடுவித்து, தன் ஆச்ரமத்தில் வைத்துக் கொண்டு அவளுக்கு ஞானோபதேசம் செய்தார். கர்ப்பத்திலிருந்த குழந்தையும் இதைக் கேட்டுக் கொண்டிருந்தது. குழந்தை பிறந்து ப்ரஹ்லாதன் என்னும் பெயருடன் பெரிய விஷ்ணு பக்தனாய் விளங்கினான்.



ப்ரஹ்லாதன்

இவன் பெரிய விஷ்ணு பக்தனாயிருப்பதைப் பொறுக்காத ஹிரண்யகசிபு அவனுக்கு அநேக விதமான சிக்ஷைகள் செய்தும் இவன் குணம் மாற வில்லை. வித்தை கற்பதற்காக ஆசார்ய புத்திரர்களிடத்தில் விடப்பட்டிருந்த இவன் ஆசார்யர்கள் வெளியில் போயிருந்த ஒரு சமயம் தன்னுடன் படித்துக் கொண்டிருந்த மற்ற அசுர பாலகர்களைப் பார்த்து அவர்களுக்குப் பக்தியை உபதேசிக்க ஆரம்பித்தான். பிரஹ்லாதன் "குழந்தைகளே, நாம் இந்தச்

சிறுவயதிலேயே பாகவத தர்மங்களை அனுஷ்டிக்க வேண்டும். இந்த மனுஷ்ய ஜன்மம் கிடைப்பது மிகவும் அரிது. கிடைத்தாலும் எவ்வளவு நாளிருக்கும் என்று சொல்ல முடியாது. ஆனால், இதனால் பெரிய இலாபத்தை அடையலாம். ஆகையினால், ஆதிதேவனான நாராயணனை ஆச்ரயிங்கள்'' என்று உபதேசிக்கிறான். முடிவில், ப்ரஹலாதன்மேல் கோபித்த ஹிரண்யகசிபுவை பகவான் நரசிம்மாவதாரம் செய்து ஸம்ஹாரம் பண்ணினார். பக்தர்களுக்குள் ப்ரஹ்லாதன் முதன்மையாகச் சொல்லப்படுகிறவன்.

## 3. ஸப்தரிஷிகளும்-வேட வால்மீகியும்

வால்மீகி ஒரு ப்ராம்மணராயிருந்து ஏதோ பாப விசேஷத்தினால் 'ரத்னாகரன்' என்ற பெயருடன்



வான்மீகி-ஸப்தரிஷிகள்

காட்டில் வேடனாகத் திரிந்து, காட்டில் போகிறவர்களுக்கு அநேக விதமான கஷ்டங்கள் உண்டாக்கிக்

கொண்டிருந்தான். அப்படி இருக்கும்போது ஒரு சமயம் அவனுடைய பூர்வ புண்ய வசத்தால் காட்டில் அவ்வழியே ஸப்த ரிஷிகள் வந்தார்கள். அவர்களை இவன் ஹிம்சை செய்ய ஆரம்பிக்கவே, அவர்கள் இவனைப்பற்றி விசாரிக்க ஆரம்பித்தார்கள். "தன் குடும்பத்தை ரக்ஷிப்பதற்காகவே, இவ்வித பாப காரியங்களைச் செய்கிறேன்" என்று அவன் சொல்லவே, "நீ செய்யும் பாபத்தில் அவர்களுக்கு பங்கு உண்டா என்று கேட்டுக்கொண்டு வா; அதுவரையில் நாங்கள் இங்கேயே இருக்கிறோம்" என்று சொன்னார்கள். அதன் பேரில் அவன் வீட்டில்போய் கேட்க அவர்கள் "எங்களைக்காப்பாற்ற வேண்டியது உன் கடமை. உன் பாபத்தில் எங்களுக்குப் பாகம் கிடையாது" என்று சொல்லவே, அவன் வைராக்கியமடைந்து மறுபடியும் ஸப்த ரிஷிகளிருக்குமிடம் வந்து அவர்களைச் சரணமடைந்தான். அவர்கள் அவனுக்கு 'ராம' என்ற நாமத்தை ஜபம் செய்யச் சொன்னார்கள். ஆனால், அந்தப்பெயர் அவனுக்குச் சரியாய் வரவில்லை. அங்கிருந்த ஒரு மரத்தைக்காட்டி இதன் பெயர் என்ன என்று கேட்க, 'மராமரம்' என்று சொன்னான். "இதையே திருப்பித்திருப்பிச் சொல்லிக் கொண்டு வா" என்று சொன்னார்கள். 'மரா மரா' என்று சொல்லிக் கொண்டு வரும்போது 'ராம ராம' என்ற பதம் ஏற்பட்டுவிட்டது. "நாங்கள் திரும்பிவரும் வரையில் இந்தப்படியே சொல்லிக் கொண்டிரு" என்று சொல்லிவிட்டு ஸப்த ரிஷிகள் சென்று விட்டார்கள். ரத்னகரன் அப்படியே சொல்லிக் கொண்டிருந்தான். காலப்போக்கில் அவனிருந்த இடத்தில் ஒரு புற்று ஏற்பட்டது. கொஞ்ச

காலம் பொறுத்து ஸப்த ரிஷிகள் அந்த வழியாய் மறுபடியும் வந்தார்கள். அப்போது ஓர் இடத்தில் "ராம ராம" என்ற சப்தம் மாத்திரம் காதில் விழவே, அவர்கள் கூப்பிட்டார்கள். அந்தச் சமயம் மழை பெய்து புற்றைக் கரைத்து விட்டது. புற்றிலிருந்து ரத்னகரன் வெளிப்பட்டான். புற்றிலிருந்து வெளிப் பட்டதினுல், அவனுக்கு 'வால்மிகி' என்று பெயர் ஏற்பட்டது. பிறகு, ஸப்த ரிஷிகளின் அனுக்கிரஹத் தினுல், மகரிஷியாக விளங்கினர். ராமாயணம் எழுதினர்.

## 4. ரைக்வர் - ஜானஸ்ருதி

ஜானஸ்ருதி என்ற அரசன் அநேக தர்மங்களை நடத்திக்கொண்டு வந்தான். ஒரு நாள் அவன் தன் அரண்மனை உப்பரிகையின்பேரில் உட்கார்ந்திருந்த சமயம் மேலே ஆகாயத்தில் இரண்டு ஹம்ஸங்கள்



ரைக்வர்-ஜானஸ்ருதி

பறந்து கொண்டிருந்தன. ஒன்று மற்றொன்றைப் பார்த்து, "ஜானஸ்ருதியின் கீர்த்தி உலக முழுதும்

பரவியிருக்கிறது. அவன்சமீபம் செல்லாதே; அவன் உன்னைச் சுட்டுவிடுவான்" என்றது. அதற்கு மற்றொரு பக்ஷி, "இவன் என்ன? வண்டியோடு இருக்கின்ற ரைக்வரை'ப் போல் அவ்வளவு பெரியவனோ" என்று கேட்டது. அதைக் கேட்ட முதல் பக்ஷி "அதென்ன, அந்த 'ரைக்வர்' என்பவர் யார்" என்று கேட்டது. அதற்கு மற்ற பக்ஷி ரைக்வர் இன்ன மகிமையுடன் கூடினவர் என்று சொல்லிற்று. இதைக் கேட்டுக் கொண்டிருந்த அரசன், அன்றிரவு முழுவதும் தூக்கமில்லாமல் மறுநாள் காலை, தன் சேவகர்களிடம் சொல்லி, ரைக்வரைக் கண்டுபிடிக்கச் சொன்னான். அவர்கள் எங்கும் தேடியும் அவர் சுலபமாய்க் கண்ணில் படவில்லை. "ப்ராம்மணர் எங்கேயாவது தனியாய் உட்கார்ந்திருப்பார், போய்ப் பாருங்கள்" என்று அரசன் சொல்ல, அவர்கள் மறுபடியும் தேடவே, அவர்கள் ஓர் இடத்தில் ஒரு வண்டியையும், அதனடியில் உடம்பைச் சொறிந்து கொண்டிருக்கும் ஒரு பிராம்மணனையும் பார்த்தார்கள். அவரிடம் சென்று 'தாங்கள் தான் ரைக்வரா' என்று கேட்க, அவர் 'ஆம்' என்றார். இதை அவர்கள் அரசனுக்குத் தெரிவிக்க, அரசன் அநேக ஆடை, ஆபரணம் பொன்னுடன் அவரிடம் சென்று "இவைகளைப் பெற்று என்னை அனுக்ரஹிக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தான். அவர் அதைப் பெற்றுக் கொள்ளாமல் நிராகரித்து விட்டார். மறுபடியும் அரசன் இன்னும் அதிக த்ரவியத்தோடு தன் பெண்ணையும் அழைத்துக்கொண்டு ரிஷியிடம் வந்து பெற்றுக் கொள்ளவேண்டும் என்றான். அதன்பேரில், ரிஷி அவைகளைப் பெற்றுக் கொண்டு அரசனுக்கு உப

தேசம் செய்தார். "சூரியன், அக்னி, சந்த்ரன், அப்பு இவைகளுக்கு வாயு சம்வர்க ஸ்தானம். இது அதிதைவத்தில். அத்யாத்மத்தில் வாக், சக்ஷுஸ், ச்ரோத்ரம், மனஸ், இவைகளுக்கு ப்ராணன் சம்வர்கம் (அதாவது லயஸ்தானம்)" என்று உபதேசிக்கிறார்.

## 5. பீஷ்மர் - தர்மபுத்ரர்

குருக்ஷேத்ர யுத்தம் முடிந்த பிறகு தர்மபுத்ரர் பட்டாபிஷேகம் செய்துகொண்டு ராஜ்யபரிபாலனம் செய்து கொண்டிருந்தார். இருந்தாலும், அவருக்குத் தம் பந்துக்களில் அநேகர்களைக் கொன்றுவிட்டு ராஜ்ய பாரம் வகிப்பதில் மனதிற்கு ஒருவிதமான சாந்தியும் ஏற்படவில்லை. எப்போதும் சோகத்துடனேயே காணப்பட்டார். இவருடைய சோகத்தைப் போக்க ஒரேவழி, இவருக்குச் சாந்தி உண்டாக்க, சரதல்பத்தில் படுத்துக்கொண்டு தன் மரணத்திற்காக உத்தராயணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் பீஷ்மரைத் தவிர வேறு யாராலும் முடியாதென்கிற எண்ணத்துடன் ஸ்ரீ கிருஷ்ணன் தர்மபுத்ரர் முதலியவர்களை அழைத்துக்கொண்டு பீஷ்மர் இருக்குமிடத்தை அடைந்தார். பீஷ்மர் மூலமாய் தர்மபுத்ரருக்கு அநேக தர்மங்கள் உபதேசிக்கப்பட்டன. இவைகளை மஹாபாரதம் அநுசாசனிகபர்வத்தில் காணலாம். எல்லாவற்றையும் கேட்ட பிறகு தர்மபுத்ரர் மறுபடியும் பீஷ்மரைப் பார்த்து, "தாங்கள் இவ்வளவு தர்மங்கள் சொன்னீர்களே, இவ்வளவில் தாங்கள் எதை மிகவும் உயர்ந்ததாக நினைக்கிறீர்கள்" என்று கேட்க பீஷ்மர், "ஸஹஸ்ர நாமத்தால் பகவானை அர்ச்சிப்பதுதான் மிகவும் உத்தம

மானது என்பது என் முடிவு" என்று பதில் சொல்லி ஸஹஸ்ரநாமத்தைச் சொல்லுகிறார். சரதல்பத்தில் பீஷ்மர்படுத்திருப்பதும் பக்கத்தில் தர்மபுத்ராதிகள் கிருஷ்ணன் முதலியவர்கள் நிற்பதும் இங்கு காட்டப்பட்டிருக்கிறது.

## 6. தர்ம வ்யாதன் - கௌசிகப்ரம்மசாரி

கௌசிகன் என்னும் ஓர் ப்ரம்மசாரி தன் வயதான தாய் தந்தையர்களை ரக்ஷிக்காமல், ஒரு மரத்



பிரம்மசாரி - தர்மவியாதர்

தடியில் உட்கார்ந்து யோகத்திலிருந்தார். ஒரு சமயம் அவரிருந்த மரத்தின் மீதிருந்த கொக்கு ஒன்று அவர்மீது எச்சமிட்டது. அதைக்கண்டு அவர் மிகவும் கோபம் கொண்டவராய் அந்தக் கொக்கை நோக்க உடனே அது எரிந்து சாம்பலாய் விட்டது. தனக்கு இப்பேற்பட்ட சக்தி ஏற்பட்டிருக்கிறதென்ற அகம்பாவத்துடன் அவர் கிராமத்தில் பிக்ஷைக்குப்போய்க் கொண்டிருந்தார். அப்படிச் செல்லும் போது ஒரு

வீட்டு வாசற்கதவு சாத்தப்பட்டிருந்ததினுல் கொஞ்சம் தாமதிக்கும்படி நேர்ந்தது. அந்த வீட்டு அம்மாள் வந்து கதவு திறந்ததும் அந்த அம்மாள் தன்னை இவ்வளவு நேரம் காக்க வைத்ததற்காகக் கோபத்துடன் பார்த்தார். உடனே அவள் அவரைப் பார்த்து, "கொக்கென்று நினைத்தாயோ" என்று கேட்டாள். ப்ராம்மணன் உடனே ஆச்சரியம் அடைந்து அந்த அம்மாளை "அந்த விஷயம் உங்களுக்கு எப்படித் தெரியும்" என்று கேட்க, அந்த அம்மாள், "நான் இவ்வளவு காலம் என் பதிக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தேன். ஸ்த்ரீகளுக்குப் பதி சிச்ரூஷையைவிட வேறு தர்மம் கிடையாது. என்னுடைய பதிவ்ரதா தர்மத்தின் மகிமையினுல் அறிந்தேன்." என்று சொல்லி, "இன்னும் தர்மம் தெரிய வேண்டுமானுல் தர்மவ்யாதனிடம் செல்" என்று சொல்லி அனுப்பினுள். ப்ராம்மணனும் கசாப்புக் கடை வைத்திருந்த தர்மவ்யாதன் என்னும் வேடனிடம் சென்றுன். இந்த ப்ராம்மணனைக் கண்டதும் தர்மவ்யாதன் எதிர் கொண்டு பூஜித்து, "பிராம்மண பத்னி அனுப்பினுளோ," என்று கேட்டான். இந்த விஷயம் எப்படி இவனுக்குத் தெரிந்தது என்று ப்ராம்மணன் ஆச்சரியப்படவே "இந்தக் கடை எனக்கு ஏற்பட்ட ஜாதி தர்மம். இதில் நான் ஒரு அபிநிவேசமும் இல்லாமல் வேலை செய்கிறேன். ஆகையினுல், எனக்கு இந்த விஷயம் தெரிந்தது" என்று சொல்லி, "தவிரவும் நான் கிழவர்களான என் தாய் தந்தையர்களுக்குப் பணிவிடை செய்கிறேன். நீயும் கொஞ்சம்

கூடச் சோம்பலில்லாமல் உன் தாய் தந்தையர்களுக்குப் பணிவிடை செய்வாயாக" என்று சொல்லி அனுப்பினான்.

## 7. யாக்ஞுவல்க்யர் - ஜனகர்

யாக்ஞுவல்க்யர் ஓர் ப்ரம்மஞானி. இவர் வ்யாசரிடமிருந்து யஜுர்வேதத்தைப் பெற்ற வைசம்பாயனரின் சிஷ்யர். ஒருசமயம் தம் குருவின் ஆணைப்படி



யாக்ஞுவல்க்யர், பத்தினிகள், ஜனகர்

அவரிடம் கற்ற வேதத்தைக் கக்கிவிட்டு சூரியபகவானிடமிருந்து வேதத்தைக் கற்றவர். இவருக்கு மைத்ரேயி, காத்யாயனி என்று இரண்டு பத்தினிகள். ஒரு சமயம் அவர் துறவுபூணவேண்டும் என்ற உத்தேசத்துடன் தமது பத்தினிகளுக்குத் தம் சொத்துக்களைப் பங்கிட்டுக் கொடுக்கையில் மைத்ரேயி என்பவள் தனக்கு "இந்தப் பொருள்கள் ஒன்றும் வேண்டாம் என்றும் அழிவில்லாத பொருள் வேண்டும்" என்றும் பிரார்த்திக்க, அவளுக்கு ஆத்மஞானம் உண்டாகும்

படி ஞானோபதேசம் செய்தார். இவர் மிதிலாதிப னான ஜனக மஹாராஜனின் குரு. ஜனகர் ஒரு சமயம் ஒரு சபையைக்கூட்டி அங்கு அநேக பசுக் களை நிறுத்தி "இந்த சபையில் யார் ப்ரம்மவித்தோ (ப்ரம்மத்தை நன்றாக அறிந்தவரோ). அவர் இந்தப் பசுக்களை ஓட்டிக்கொண்டு போகட்டும்" என்று சொன்னார். அச்சமயம் அந்தசபையிலிருந்த யாக்ஞ வல்க்யர் தம் சிஷ்யர்களை பார்த்துப் "இந்தப் பசுக் களை நம் ஆச்ரமத்திற்கு ஓட்டிக்கொண்டு போங்கள்" என்று சொல்ல, சபையில் உள்ளோர் "இவ்வளவு பேரில் நீர்தான் ப்ரம்மவித்தோ?" என்று அவரை வாதத்துக்கு அழைக்க, அவர்களை எல்லாம் வாதத்தில் ஜயித்தார். ஜனக மஹாராஜனுக்கு ஞானோபதேசம் செய்தார். ஜனக மஹாராஜா அவருக்குத் தம் ராஜ் யம் முழுவதையும் தன்னையும் கொடுத்து விடுவ தாயும் சொன்னார். ஒரு சமயம் யாக்ஞவல்க்யர் சிஷ்யர்களுக்குப் பாடம் சொல்லிக்கொண்டிருக்கை யில் மாயையினால் மிதிலா நகரம் தீப் பற்றி எரிவது போல் ஒரு தோற்றத்தை உண்டாக்கினார். இதைக் கண்டதும் சிஷ்யர்களெல்லோரும் தங்கள் தங்கள் துணிமணிகளைக்காப்பாற்றுவதற்கு எழுந்து ஓடினார் கள். ஆனால், ஜனகர் மாத்திரம் ஒருவித கலக்கமு மின்றி உட்கார்ந்திருந்தார். இதைப்பற்றி அவரைக் கேட்ட போது, "மிதிலா நகரம் எரிந்து போனால் எனக்கு ஒன்றும் நஷ்டமில்லை" என்று பதிலளித் தார் ஜனகர். "தான், தன்னுடையது" என்னும் அபிமானவற்றவர் என்பது இதன் கருத்து. யாக்ஞவல்க்யர் ஜனகருக்கு உபதேசம் செய்ததின்

கருத்து இங்குச் சுருக்கமாகத் தரப்பட்டிருக்கிறது. "ஹே மஹாராஜா, நான், நீ, சத், அசத்தாக வுள்ள சகல பூதங்களும் எல்லாம் ப்ரம்மமே தவிர வேறில்லை" என்பதுதான் அந்த உபதேசத்தின் கருத்து.

## 8. யமன் - நசிகேதஸ்

வாஜச்ரவஸ் என்னும் ரிஷி ஒரு யாகம் செய்தார். அதன் முடிவில் தன்னிடமிருந்தவைகளை எல்லாம் யாகத்தில் தக்ஷிணையாய்க் கொடுத்துக் கொண்டு வந்தார். அதைப் பார்த்துக் கொண்டு இருந்த ''நசிகேதஸ்' என்னும் அவருடைய பால்ய



யமன்-நசிகேதஸ்

வயதுள்ள குமாரன் தன் தகப்பனுர் "என்னஇப்படி பல்லில்லாத கறக்காத பசுக்களைத் தானம் செய்கிருரே" என்று வருத்தமடைந்து தகப்பனுரைப் பார்த்து, ''அப்பா! என்னை யாருக்குக் கொடுக்கப் போகிறீர்கள்?'' என்று கேட்டான். அவரிடம் அவன்

இரண்டு தடவை கேட்டும், ஒன்றும் பதில் சொல்ல வில்லை. மூன்ருவது தடவையும் கேட்டான். அவருக்குக் கோபம் வரவே, "உன்னை யமனுக்குக் கொடுக்கிறேன்" என்ருர். உடனே அந்தப் பையன் யமலோகத்திற்குப் போனுன். அங்கு அச்சமயம் யமன் இல்லை; வெளியே போயிருந்தார். அவர் வர 3 நாளாயின. அதுவரையில் காத்திருந்தான். யமன் வந்ததும், ப்ராம்மணனை 3 நாட்களாக காக்க வைத்ததால் மனம் வருந்தி, அதற்கு ப்ரதியாக 3 வரங்களைக் கொடுக்கிறேன்" என்ருர். "தன்னுடைய தகப்பனுருக்குத் தன்னிடம் கோபமிருக்கக் கூடாது" என்கிற முதல் வரத்தையும், "அக்னியின் ஸ்வரூபத்தைத் தெரிவிக்க வேண்டும்" என்னும் 2வது வரத்தையும், இந்த 2 வரங்களைப் பெற்ற பிறகு, மூன்ருவதாக "சரீரம் இறந்த பிறகு ஜீவன் இருக்கிருன் என்று சிலர் சொல்லுகிருர்கள். சிலர் இல்லை என்கிருர்கள். இதனுடைய உண்மையைச் சொல்ல வேண்டும். இது தான் நான் வேண்டும் மூன்ருவது வரம்" என்று கேட்கிருன் நசிகேதஸ். இதைக் கேட்ட யமன் "இது பெரிய விஷயம்; இதுவேண்டாம். வேறுஏதாவது கேள்" என்று அநேக விதமாய் அவனைத் தடுத்தும் கேட்காமல் "இதுதான் முக்கியமாய் நான் அறிந்துகொள்ள வேண்டிய விஷயம்" என்று நசிகேதஸ் கேட்கவே, கடைசியில் யமன், "எல்லாராலும் சுலபமாய்க் காண முடியாததும், மறைந்திருப்பதும் உத்தமமுமான **'பரதத்வம்'** ஒன்று இருக்கிறது. அது எங்கும் நிறைந்திருக்கிறது. அதை ஒருவன் அறிந்துகொண்டு விட்டால் அவனுக்குச் சுகம் துக்கம் என்பது கிடை

யாது. அவன் எல்லாவற்றையும் தாண்டினவனாக ஆகிறான்'' என்று ப்ரம்ம ஞானத்தையும் அதை அடைந்தால் ஏற்படும் நிலையையும் தெரிவிக்கிறார்.

## 9. நாரதர் - ஸனத்குமாரர்

தேவரிஷியான நாரதர் ஒரு சமயம் பிரம்மாவின் மானஸ புத்ரர்களில் ஒருவரான ஸனத்குமாரரை அடைந்து தனக்கு ஞானத்தை உபதேசிக்கவேண்டு



ஸனத்குமாரர் நாரதர்

மென்று பிரார்த்தித்தார். ஸனத்குமாரர், "உனக்கு இதுவரையில் தெரிந்ததைச் சொல். பிறகு உபதேசிக்கிறேன்'' என்றார். நாரதரும் "அப்படியே" என்று சொல்லி. தான் கற்றதைச் சொல்லுகிறார். "நான் ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதரவண வேதம், இதிஹாஸ புராணங்கள், முதலிய சாஸ்திரங்களைப் படித்தேன். நீதிசாஸ்திரம், சகுன சாஸ்திரம், வ்யாகரணம். பூதவித்யை முதலிய வித்யைகளையும் கற்றிருக்கிறேன். ஆனால், இவைகளைக் கற்

றதிலை. எனக்கு ஒரு வித திருப்தியும், சாந்தியும் ஏற்படவில்லை. எவன் ஒருவன் ஆத்ம ஞானத்தை அடைகிருனே அவன் சோகத்திலிருந்து நிவ்ருத்தி அடைவான் என்று கேட்டிருக்கிறேன். என்னுடைய சோகத்தைத் தாங்கள் போக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிருர்.

அதன் பேரில் ஸனத்குமார் அநேக விஷயங்கள் சொல்லி, கடைசியில் நாரதருக்கு "எந்த ஒன்றை அடைந்துவிட்டால், வேறு ஒன்றையும் பார்க்கமாட்டானே. அறியமாட்டானே, அதுதான் 'பூமர்' எல்லாவற்றிலும் பெரிது. எது எல்லாவற்றைக் காட்டிலும் பெரிதோ அதுதான் அம்ருதம், சாவு இல்லாதது. எது சிறியதோ, அது அல்பம்; அழியக் கூடியது" என்று ப்ரம்ம ஸ்வரூபத்தை உணர்த்துகிருர். "எது எல்லாவற்றிலும் பெரியதோ, அது ஆத்மா, அம்ருதம். அது தன்னைக் காட்டிலும் வேறல்ல என்று அறிபவனே சுகத்தை அடைகிருன்" என்று உபதேசிக்கிருர்.

## 10. ஸனத்ஸுஜாதர் - த்ருதராஷ்ட்ரன்

த்ருதராஷ்ட்ரன் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் யுத்தம் உண்டாகாமல் செய்ய வேண்டுமென்னும் எண்ணத்துடன் ஸஞ்ஜயனைப் பாண்டவர்களிடம் அனுப்பிவைத்தான். ஸஞ்ஜயன் திரும்பி வந்து "பாண்டவர்கள் தெய்வபக்தி உள்ளவர்கள். அவர்களுக்குக் கேடு நினைத்தவர்கள் அழிந்து போவார்கள்" என்று சொல்ல, அது கேட்ட த்ருதராஷ்ட்ரன் அன்றிரவு முழுவதும் தூக்கமில்லாமல்

விதுரரைக் கூப்பிட்டு தன் மனதில் உள்ள சோகம் போகும்படி தர்மோபதேசம் செய்யுமாறு கேட்டுக் கொண்டான். அதன் மேல் விதுரர் த்ருதராஷ்ட்ர னுக்கு அநேக தர்மங்கள் எடுத்துச் சொல்லியும் த்ரு தராஷ்ட்ரனுடைய மனதிற்குச் சாந்தி ஏற்படவில்லை. அதன் பேரில் இவனுக்கு ப்ரம்ம ஞானமுண்டானல் தான் மனச்சாந்தி ஏற்படும் என்று நினைத்து விது



த்ருதராஷ்ட்ரன், விதுரர்-ஸனத்ஸுஜாதர்

ரர் தான் அந்த மாதிரி ப்ரம்மஞானத்தைச் சொல் லுவதற்கு அர்ஹனல்லனென்று நினைத்து, ப்ரம்மா வின் மானஸ குமாரரில் ஒருவரான ஸனத்ஸு ஜாதரை நினைக்க, அவர் வந்து த்ருதராஷ்ட்ரனுக்கு ஞானோபதேசம் செய்கிருர். இது மஹாபாரதம் உத்யோகபர்வத்திலுள்ளது. "ப்ரம்மம் எங்கும் நிறைந்தது. அதிலிருந்து எவ்வளவு எடுத்தாலும் அதற்குக் குறைவு ஏற்படாது; பூர்ணமாகவே இருக் கும். இதை யோகிகள்தான் அறிவார்கள்" என்று உபதேசிக்கிருர்.

## 11. சூதர்—மகரிஷிகள்

நைமி சாரண்யத்தில் சூதமுனிவர் சௌனகாதி ரிஷிகளுக்குப் புராணங்கள் சொல்லுவதில் சூதஸம்ஹிதையில் சிவபெருமான் பெருமைகளைப் பற்றிச் சொல்லும் பொழுது, "சிவதத்துவமே எல்லாவற்றிலும் உயர்ந்தது. அதற்கு ஆதி, மத்யம். முடிவு என்று கிடையாது" என்று உபதேசிக்கிறார்.

## 12. வால்மீகி - குசலவாள்

வால்மீகி முனிவர் ஒரு சமயம் ஆச்ரமத்தில் உட்கார்ந்திருந்தபோது அவ்விடத்தில், நாரத மகரிஷி வந்தார். வால்மீகி நாரதரை பூஜித்து, "இந்த சமயத்தில் உலகத்தில் சகல உத்தம குணங்



வால்மீகி–குசலவாள்

களோடு கூடின புருஷன் யாராவது இருக்கிறார்களா" என்று கேட்க, நாரதர், "அயோத்தியில் ராமன் இருக்கிறார்" என்று சொல்லி, ராமனுடைய சரித்

திரத்தை சங்க்ரஹமாய் உபதேசிக்கிருர். இதற்கு சங்க்ஷேப ராமாயணம் என்று பெயர். நாரதர் சென்ற பிறகு வால்மீகி சிஷ்யர்களுடன் தமஸா என்ற நதிக்கு ஸ்நானம் செய்யச் சென்ருர். அந்தச் சமயம் அங்கு ஒரு மரத்தில் இருந்த இரண்டு பக்ஷி களில் ஒன்றை வேடன் ஒருவன் அடிக்கவே, அதன் பேரில், அவனைச் சபித்தார். அந்தச் சாபம் ஒரு சுலோக ரூபமாய் ஏற்பட்டது. இதைப் பற்றி அவர் யோசித்துக்கொண்டிருக்கும்போது ப்ரம்மா அவ ரிடம் வந்து "என்னுடைய பிரேரேபணையின்பேரில் தான் உன் முகத்திலிருந்து இது சுலோக ரூபமாய் ஏற்பட்டது. இதே மாதிரியே, ராமனுடைய சரித் திரம் முழுவதும் எழுது" என்று சொல்லிவிட்டுப் போனுர். அதன்பேரில் வால்மீகி ராமாயணத்தை எழுதி இதை யாருக்குச் சொல்லி வைப்பது என்று யோசித்துக்கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் ஏற்கெனவே, ராமபட்டாபிஷேகத்திற்குப் பிறகு ஒரு நாள் ஒரு வண்ணுன் சொன்ன வார்த்தையைக் கேட்ட ராமன் உத்திரவின்பேரில் பூரண கர்ப்பிணி யாய்க் காட்டில் விடப்பட்டு வால்மீகியின் ஆச்ர மத்தை அடைந்த சீதையின் குமாரர்களான லவன், குசன் என்பவர்கள் வந்து, வால்மீகியை நமஸ்கரித் தார்கள். வால்மீகி அவர்களைப் பார்த்து "இந்த ராமாயணம் முழுவதையும் சந்தோஷமாய் நீங்கள் பாடுங்கள்" என்று சொல்லி, அவர்களுக்கு ராமாய ணத்தை உபதேசித்தார். அதுதான் இங்குக் காட்டப் பட்டிருக்கிறது.

## 13. ஜடபரதரும் ரஹூகணரும்

பரதர் பகவத்கலாவதாரமான ரிஷப தேவரின் புத்ரன். இவர் ஆண்டதினுல் தான் இந்தக் கண்டத்திற்கு பரத கண்டம் என்று பெயர் ஏற்பட்டதாகச் சொல்லப்படுகிறது. இவர் ஒரு சமயம் கண்டகீ நதி தீரத்தில் ஸந்த்யாவந்தனம் செய்து கொண்டிருக்கும் சமயம் அந்த நதியில் ஜலம் குடிக்க வந்த ஒரு மான் ஒரு சிம்மத்தின் கர்ஜனையை கேட்டுப்



ஜடபரதர்-ரஹூகணர்

பயந்து ஆற்றில் விழுந்து பிராணனை விட்டது. அச்சமயம் அந்த மான் கர்ப்பமாயிருந்ததால், அதன் கர்ப்பம் நழுவி மான் குட்டி நதியுடன் போவதை இவர் பார்த்ததும், அந்த மான் குட்டியின் பேரில் கருணை ஏற்பட்டு அந்த மான் குட்டியைத் தன் ஆச்ரமத்திற்குக் கொண்டு போய் வளர்த்து வந்தார். அதன் பேரிலுள்ள வாஞ்சையினுல், நாளடைவில் அவருடைய யோகம் முதலியவைகள் குறைந்து போய்க் கடைசியில் பிராண வியோகம் ஆனபோது

அந்த மான் குட்டியை நினைத்துக் கொண்டே பிராணனை விட்டதால், அவருக்கு அடுத்த ஜன்மம் மான் ஜன்மமாய் ஏற்பட்டது. ஆனால், அவருக்கு பூர்வஜன்ம ஞானமிருந்ததால், தாம் மானினிடம் வைத்த அபிமானத்தினால்தான் தமக்கு மான் ஜன்மம் வந்ததென்று அறிந்து, அந்த மான் ஜன்மத்தை சீக்கிரத்தில் விட்டு விட்டு, ஒரு பிராம்மணர் குடும்பத்தில் பிறந்தார். ஆனால் பூர்வ ஜன்மத்தில் ஒரு மானிடத்தில் பற்று வைத்ததினால், தனக்கேற்பட்ட கதியை நினைத்து இந்த 3-வது பிராம்மண ஜன்மத்தில் ஒரு மூடனைப் போலவே நடித்து வந்தார். ஒருவரிடமும் ஒன்றும் பேசுவதில்லை. யார் எதைக் கொடுத்தாலும் சாப்பிடுவார். எதைச் செய்யச் சொன்னாலும் செய்வார். இவர் இப்படி ஒரு ஜடம் மாதிரி தம்மைக் காட்டிக் கொண்டிருந்ததினால், அவருக்கு 'ஜடபரதர்' என்று பெயர் ஏற்பட்டது. ஒருசமயம் இவரை நரபலி கொடுப்பதற்காக ஒரு தேவியின் சந்நிதியில் கொண்டுபோய் நிறுத்தினார்கள். இவர் மகிமையை அறிந்த காளி அந்த விக்ரஹத்திலிருந்து கிளம்பி இவரைப் பலி யிடுவதற்காகக் கொண்டு போனவர்களை வதம் செய்து இவரைக் காப்பாற்றி விட்டாள். பிறகு அவர் இப்படியே திரிந்துகொண்டு வருகையில் அவ்விடத்தில், பல்லக்குச்சவாரிசெய்துகொண்டிருந்த 'ரஹூகணன்' என்னும் அரசனுடைய பல்லக்கைத் தூக்கும்படி ஏவப்பட்டு, தூக்கிக் கொண்டு போகும் போது இவர் பூமியில் ஒரு ஜந்துக்களும் இல்லாமல் பார்த்துக் கொண்டு மெதுவாய் நடந்ததினால், பல்லக்கு சரியாய்ப் போகாமல் அரசனுக்கு

கஷ்டம் ஏற்பட்டது. அதன் பேரில் ரஹூகணன் இவரைக் கோபிக்கவே அவனுக்கு இவர் சொன்ன பதிலிலிருந்து இவர் ஓர் மகான் என்றறிந்த அரசன் பல்லக்கை விட்டு இறங்கி, அவரை நமஸ்கரித்துத் தான் தெரியாமல் செய்த அபசாரத்தை மன்னிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தான். அந்த அரசனுக்கு ஞானோபதேசம் செய்துவிட்டு முடிவில், "இந்த ஞானம் யாகம், தானம், தபஸ் முதலியவைகளால் சுலபமாய்க் கிடைக்காது. மகான்களின் பாததூளியை ஸேவித்தால் தான் அடையலாம்" என்று உபதேசித்தார். அரசன் பல்லக்கை விட்டு இறங்கி, பரதருக்கு நமஸ்கரிப்பது இங்கு காட்டப்பட்டிருக்கிறது.

## 14. ஜயதேவர்—பத்மாவதி

ஜயதேவர் ஒரு மகா பக்தர். கவியும் கூட. பஜனை சம்பிரதாயத்தில் அவருடைய 'கீத கோவிந்



ஜயதேவர்-பத்மாவதி

தம்' என்னும் கிரந்தத்தைப் பற்றித் தெரியாதவர்கள் இந்தத் தேசத்திலிரார். அனேகமாய், எல்லா பஜனை

களிலும் 'அஷ்டபதி' என்று சொல்லப்படும் இவருடைய 'கீத கோவிந்தத்தைப்' பாடுவார்கள். இந்த கீத கோவிந்தம் ஸ்ரீ ராதா கிருஷ்ணலீலைகளை வர்ணிக்கிறது. ஜீவாத்மாவான ராதை பரமாத்மாவிடம் ஒன்ருய்ச் சேருவதை காவ்யரூபமாக இதில் ஜயதேவர் சொல்லுகிருர். ப்ரதி தினமும் இவர் பகவத் ஸந்நிதியில் 'அஷ்டபதி' பாடுவார் என்றும், அச்சமயம் அவருடைய பத்னியான 'பத்மாவதி' அதற்குச் சரியாய் பகவத் ஸந்நிதியில் நடனம் செய்வாள் என்றும் சொல்லப்படுகிறது. அதையே "பத்மாவதி சரண சாரண சக்ரவர்த்தி" என்கிருர். கிரந்தத்தின் முடிவில், "எந்தப் பொருள் வேதங்களினுலும் அறியப் படவில்லையோ எதை ப்ரம்மா முதலியவர்களாலும் காணமுடியவில்லையோ எல்லாவற்றிற்கும் மேலான அந்த வஸ்து இந்தக் கிரந்தத்தால் எல்லோருக்கும் விளங்கட்டும்" என்று சொல்லியிருக்கிருர்.

## 15. வித்யாரண்யர் - புக்க பூபாலன்

ஸ்ரீ வித்யாரண்யர் ச்ருங்கேரி பரம்பரையைச் சேர்ந்தவர். விஜய நகர ராஜ்யத்தை ஸ்தாபித்தவர். வித்யாரண்யர் ஹரிஹரர் புக்கர் என்னும் இரு அரசர்களுடைய காலத்திலும் மந்திரியாயிருந்தார். இவர் அத்வைத க்ரந்தங்கள் அநேகம் எழுதியிருக்கிருர். இவருடைய கிரந்தங்களில் முக்கியமானது 'பஞ்சதசி' என்னும் கிரந்தம். உபநிஷத்சாரத்தை "அனுபூதிப்ரகாசம்" என்னும் கிரந்தம் எழுதித் தெளிவாக்கியிருக்கிருர். இவரும் இவருடைய தம்பி சாயனுசார்யரும் நான்கு வேதங்களுக்

கும் பாஷ்யம் எழுதியிருக்கிறுர்கள். வித்யாரண்யர் "தர்மத்திஞல்தான் ச்ரேயஸ்ஸை அடையலாம்"



புக்கர், ஹரிஹரர்-வித்யாரண்யர்

என்று புக்கருக்கு உபதேசம் செய்வதாய் இச்சித்திரத்தில் காண்பிக்கப்பட்டிருக்கிறது.

## 16. மீராபாய் - ரைதாஸ்

மீராபாய் மார்வார்தேசத்து ராஜபுத்திரி. அவள் சிறு குழந்தையாயிருக்கும்போதே தெருவில் போய்க் கொண்டிருந்த ரைதாஸ் என்னும் பக்தரிடமிருந்த கிருஷ்ணன் விக்ரஹத்தைப் பரர்த்தாள். அதில் அவளுக்கு ஓர் ஆசை ஏற்பட்டு, அதை அவரிடமிருந்து பெற்று, அதை ஆராதித்து வந்தாள். நாளாக நாளாக அவளுக்குப் பூர்வ புண்ணியவசத்தால் கிருஷ்ணனிடத்தில் அபார ப்ரேமை உண்டாகிவிட்டது. அவள் சித்தூர் ராஜாவை விவாகம் செய்து கொண்டாள். ஆனுலும் அவள் மனது எப்போதும் கிருஷ்ணனிடமே லயித்திருந்தது. அவள் அடிக்கடி பக்தர்களோடு

பஜனை செய்வாள். இது அரண்மனையிலுள்ளவர்களுக்குப் பிடிக்கவில்லை. அநேகவிதமாய் அவளைத் தடுத்துப்பார்த்தார்கள். அவள் கேட்கவில்லை. அவளுக்கு ஒரு சமயம் விஷத்தை அனுப்பிச் சாப்பிடச் சொன்னார்கள். அவள் சாப்பிட்டாள். ஆனால், அது அவளை ஒன்றும் செய்யவில்லை. அவள் பூஜித்த கிருஷ்ண விக்ரஹம் நீலநிறமாக மாறிவிட்டது. அவள் முக்கியமாய் கிருஷ்ணன் மீது அநேக கீர்த்தனங்கள் பாடியிருக்கிருள். வட தேசத்தில் இந்தக் கீர்த்த



ரைதாஸ்-மீராபாய்

னங்கள் தெரியாதவர்கள் இருக்கமாட்டார்கள். ஒரு சமயம் இவள் ப்ருந்தாவனத்திலிருந்த ரூபகோஸ்வாமி என்னும் சைதன்யரின் சிஷ்யரைத் தரிசனம் செய்யவேண்டுமென்று அவரிருக்குமிடம் சென்ருள். ஆனல் அவர் தாம் ஸ்திரீகளைப்பார்ப்பதில்லை என்று சொல்லி அனுப்பிவிட்டார். அதன் பேரில், மீராபாய் "இந்த ப்ருந்தாவனத்தில் கிருஷ்ணன் ஒருவன் தான் புருஷன். மற்றவர்கள் ஸ்திரீகள். அவர் தாம் புரு

ஷன் என்று நினைத்தால், அவர் ப்ருந்தாவனத்தில் இருக்கக்கூடாது" என்று சொல்லி அனுப்பினாள். இவளுடைய பக்தியின் மேன்மையைக் கண்டு உடனே அவர் இவளைத் தரிசித்தார். கிரிதரனை கோபாலனைத் தவிர எனக்கு இரண்டாவது வஸ்து ஒன்றும் கிடையாது என்று இவள் ஒரு கீர்த்தனம் பாடியிருக்கிறாள். அதுதான் இங்கு செதுக்கப்பட்டிருக்கிறது.

## 17. ராமானந்தர் - கபீர் தாஸ்

கபீர்தாஸ் குழந்தையாய் ஒரு மகம்மதியனால் கண்டெடுக்கப்பட்டு வளர்க்கப்பட்டவர். சிறு பிராயம் முதலே, அவருடைய மனது பக்தி மார்க்கத்தில் சென்றது. அவர் ஒரு குருவைத் தேடி அலைந்தார். அக்காலத்தில் ராமானந்தர் என்னும் பெரிய பக்தர்



ராமானந்தர்-கபீர்

காசியில் வசித்து வந்தார், அவரை இவர் குருவாக அடையவேண்டுமென்று எண்ணினார். ஆனால், அவர் தமக்கு உபதேசம் செய்வாரோ என்று சந்தேகம்

ஏற்படவே, அதற்காக ஒரு யுக்தி செய்தார். ராமானந்தர் தினம் கங்கைக்கு ஸ்நானத்திற்குப் போவது வழக்கம். ஒருநாள், கபீர் அதிகாலையில் எழுந்து ராமானந்தர் வழக்கமாய் ஸ்நானம் செய்யுமிடத்தில் ஒரு படியில் படுத்துக் கொண்டிருந்தார். ராமானந்தர் ஸ்நானத்திற்கு வந்தபோது இருட்டாயிருந்ததால், கபீர் படுத்திருப்பது அவருக்குத் தெரியாமல் கபீர் தலைமீது காலை வைத்துவிட்டார். உடனே யாரையோ மிதித்து விட்டோமென்று நினைத்து, "**ராமராம**" என்றார். உடனே கபீர் எழுந்து அவருக்கு நமஸ்கரித்து, "தாங்கள் எனக்குப் பாததீக்ஷையும் தந்து ராமநாம உபதேசமும் செய்துவிட்டீர்கள்" என்று சொல்லித் துதித்துவிட்டுச் சென்றார். அவருடைய முக்கியமான கொள்கை ஹிந்துக்களையும் மகம்மதியர்களையும் ஒன்று படுத்தவேண்டுமென்பது. அவர் ஹிந்துஸ்தானியில் அநேக கீர்த்தனங்கள் செய்திருக்கிறார். அநேகமாய் ராமன்மீதுதான் அதிகம். '**ராமனை பஜி**' என்று சொல்லுகிறார்.

(**ஸ்ரீ சங்கர மண்டபம் மேல் வரிசையில் கிழக்கிலிருந்து ப்ரதக்ஷணமாய்**)

## 18. சசிவர்ணர் - நந்திபாராயணர்

சூதஸம்ஹிதையில் விருத்தாசல மகாத்மியத்தில் சசிவர்ணன் விஷயம் வருகிறது. ஒரு ப்ராம்மணன் மிக வைதிகமாய் தர்மசாஸ்திரங்களுக்கு விரோதமில்லாமல் நடந்துவந்தார். அவருக்கு ஒரு புத்திரன் பிறந்தான். அவன் பெரியவனான பிறகு, அநேக அக்ர

மங்கள், துராசாரம் உள்ளவனுயிருந்து அவனுக்கு ரோகங்கள் ஏற்பட்டுவிட்டன. அவனுடைய தகப்பனுர் எப்படியாவது அவனுக்குச் சரீரம் சௌக்கியமாக வேண்டுமென்ற எண்ணத்துடன் க்ஷேத்ராடனங்கள் செய்து வரும் காலத்தில் விருத்தாசலத்தில் வசித்துவந்த நந்திபாராயணர் என்னும் ஒரு மகானைத் தரிசித்தார். அவர் சொற்படி அந்த க்ஷேத்ரத்திலேயே தங்கி ஸ்நானம், சுவாமி தரிசனம்



நந்திபாராயணர்-சசிவர்ணர்,

செய்து கொண்டு வந்தார். அவர் புத்திரனுக்குச் சரீரம் சௌக்கியமாக ஏற்பட்டுவிட்டது அவனுக்கு ஞானேபதேசம் செய்யும் மாதிரியில் **'சசிவர்ண போதம்'** என்று தமிழில் ஓர் உத்தமமான நூல் இருக்கிறது. இங்கு தக்ப்பனுர் ரிஷியை நமஸ்கரித்துப் பிரார்த்திருக்கிருர். ரோகியான புத்திரனும் அவர் பின்னுலே நிற்கிருன்.

## 19. அப்பயதீக்ஷிதர் - நீலகண்ட தீக்ஷிதர்

அப்பயதீக்ஷிதர் வட ஆர்க்காடு ஜில்லா அடைய பலம் என்னும் கிராமத்தில் பிறந்தவர். இவருடைய பிதாவான ரங்கராஜ தீக்ஷிதர் "அத்வைதவித்யாமுகுரம்" என்னும் அத்வைத கிரந்தம் எழுதியிருக்கிருர். அப்பயதீக்ஷிதருக்குத் தெரியாத சாஸ்திரம் கிடையாது. எல்லா சாஸ்திரங்களிலும் கிரந்தங்கள் செய்திருக்கிருர். அத்வைதம், விஷ்ணு விசிஷ்டாத்



அப்பய்ய தீக்ஷிதர்-நீலகண்ட தீக்ஷிதர்

வைதம், மாத்வம், சைவவிசிஷ்டாத்வைதம், இவைகள் எல்லாவற்றையும் பற்றிக் கிரந்தங்கள் எழுதியிருக்கிருர். ஸ்ரீ ஆசாரியாரின் சூத்ர பாஷ்யத்தியத்திறகு வாசஸ்பதி மிச்ரர் என்பவர் **'பாமதி'** என்று வியாக்யானம் எழுதியிருக்கிருர். அதற்கு அமலானந்தர் என்பவர் **'கல்பதரு'** என்று ஒரு வ்யாக்யானம் எழுதியிருக்கிருர். அதற்கு அப்பயதீக்ஷிதர் **'பரிமளம்'** என்று ஒரு வ்யாக்யானம் எழுதியிருக்கிருர். ஸ்வதந்த்ரமாய் ப்ரம்ம சூத்ர விஷயமாய் **"ந்யாய**

**ரக்ஷாமணி**" என்று ஒரு க்ரந்தம் எழுதியிருக்கிறார். ப்ரம்மஸூத்ரத்திற்குச் சிவபரமாய் ஸ்ரீகண்ட பாஷ்யம் என்று ஒன்று உண்டு. அதற்கு இவர் "சிவார்க்க மணி தீபிகை" என்று ஒரு பெரிய வ்யாக்யானம் எழுதியிருக்கிறார். அநேக ஸ்தோத்ர க்ரந்தங்களும் எழுதியிருக்கிறார். இவருடைய சகோதரரின் பேரன் நீலகண்ட தீக்ஷிதர் என்பவரும் ஒரு பெரிய வித்வான். இவர்கள் குடும்பத்தில் பாகம் பிரித்துக் கொண்ட சமயம் தீக்ஷிதர் நீலகண்ட தீக்ஷிதருக்கு 'ஸப்தசதி'யை (தேவிமாகாத்மியத்தை) "இதனால் நீ ஸகலச்ரேயஸ்ஸையும் அடைவாய்" என்று அநுக்ரஹித்துக்கொடுத்தார். அதை இது காண்பிக்கிறது. ஆசார்யாளுடைய பாஷ்யத்தை இவர் ஸ்தோத்ரம் செய்யும் ஒரு சுலோகம் இங்கு போடப்பட்டிருக்கிறது.

## 20. போதேந்த்ராள் - ஸ்ரீதரவேங்கடேசர்

**போதேந்த்ராள்** : இவர் கீர்வாணேந்த்ர சரஸ்வதி என்னும் அத்வைத பீடத்தில் இருந்தவரின் சிஷ்யர். காஞ்சி காமகோடி பீடாதிபதியாயிருந்த ஸ்ரீ விச்வாதிகேந்தர சரஸ்வதிக்கு சிஷ்யராய் அவருக்குப்பின் அந்தப் பீடத்தை அலங்கரித்தவர். ப்ரம்ம ஸூத்ர பாஷ்யத்திற்கு **அத்வைத பூஷணம்** என்ற ஒரு வ்யாக்யானம் எழுதியிருக்கிறார். ஆச்சார்யாளின் **ஆத்ம போதத்திற்கும்** ஒரு வ்யாக்யானம் எழுதியிருக்கிறார். இதைத் தவிர பகவன்நாம மகிமையைப்பற்றி "நாமாம்ருதரஸாயனம், நாமாம்ருதரஸோதயம், ஹரிஹராத்வைத பூஷணம், ஹரி

ஹர பேத திக்காரம்" முதலிய கிரந்தங்கள் எழுதி யிருக்கிறார். இவருடைய காலத்தில் தான் ஸ்ரீதர வெங்கடேசர் என்பவரும் திருவிசநல்லூரில் இருந் தார். இவருடைய அதிஷ்டானம் கும்பகோணத் திற்குச் சமீபத்திலுள்ள திருவிடைமருதூரின் கிழக்கே ஒரு மைல் தூரத்திலுள்ள கோவிந்தபுரத்தி



ஸ்ரீதரவெங்கடேசர்-போதேந்தரர்

லிருக்கிறது. ஒவ்வொரு வருஷமும் அவ்வூரில் புரட டாசி மாதம் இவருடைய ஆராதனை நடக்கிறது. இச் சிலையில் போதேந்த்ராளும் ஸ்ரீதர வெங்கடேசரும் காணப்படுகிறார்கள். "பகவான் ஹரியின் நாம ரூப மாயும் பரமசிவ நாம ரூபமாயும் விளங்குகிறார்" என்று இங்கு சொல்லுகிறார்.

## 21. பத்ராசலம் ராமதாசர்

பத்ராசல ராமதாசர் ஆந்த்ர தேசத்தவர். இவ ருக்குக் கோபண்ணு என்று பெயர். இவர் கோல் கொண்டா தானிஷாவிடம் தாசில்தாராக இருந்தார்.

அந்த சமயம் கஜானாவிலுள்ள தொகையை ராஜாங்கத்திற்குச் செலுத்தாமல் பத்திராசலத்திலுள்ள ராமர் கோவில் திருப்பணியில் செலவிட்டு விட்டார். இது விஷயம் தெரிந்த தானிஷா அவரைச் சிறையில் வைத்தார். கோபண்ணா 12 வருஷகாலம் சிறையில் இருந்து 'ராமனையே' பாடிக்கொண்டிருந்தார். 12 வருஷம் முடிந்த பிறகு ராமலக்ஷ்மணர்கள் சேவகர் வேஷம் பூண்டு தானிஷாவுக்குச் செலுத்தவேண்டிய தொகைகளைச் செலுத்தியதாகச் சரித்திரம்.



தானிஷா-ராமதாஸ்

தானிஷா கோபண்ணாவிடம் வந்து, "தாங்கள் மகா பக்தர்; நான் அபராதம் செய்து விட்டேன்" என்று சொல்லிப் பிரார்த்தித்தான். கோபண்ணா "தாங்கள் தான் பாக்யசாலி; ராமனைத் தாங்கள் நேரில் பார்த்தீர்கள்" என்று தானிஷாவைக் கொண்டாடினார். பத்ராசலம் ராமருக்குக் கோவில் கட்டினதினால் அவருக்கு பத்ராசலராமதாஸ் என்றும் பெயர் ஏற்பட்டது. அவர் ஒரு கீர்த்தனத்தில் 'எல்லாம் ராமனே' என்று

பொருள்படும்படி 'அந்தா ராமமயம்' என்று பாடினார். அதுவே இங்குச் செதுக்கப்பட்டிருக்கிறது.

## 22. வாசஸ்பதி மிச்ரர்—பாமதி

வாசஸ்பதி மிச்ரர் என்பவர் ஆறுசாஸ்த்ரங்களும் படித்த ஒரு மகாவித்வான். பாமதி அவருடைய தர்மபத்னி. வாசஸ்பதி மிச்ரர் ஆதிசங்கர பகவத் பர்தாளால் இயற்றப்பட்ட ப்ரம்ம சூத்ர பாஷ்யத்திற்கு ஒரு வ்யாக்யானம் எழுதியிருக்கிறார். இந்த



வாசஸ்பதி மிச்ரர்-பாமதி

வியாக்யானம் எழுதும் வேலையில் ஈடுபட்ட இவர் தனக்கும் தன் பத்னிக்கும் வார்த்தக்யம் வந்ததைக் கூடக் கவனிக்கவில்லை. புஸ்தகம் முடிந்ததும், தம் பத்னியைப் பார்த்து, "உன்னை நான் கவனிக்கவே இல்லையே; உனக்கு இப்போது என்ன வேணும்" என்று கேட்டார். "நம் வம்சம் விளங்க ஒரு புத்ரனில்லையே என்பதுதான் எனக்குக் குறை"

என்று அவள் சொன்னதின்பேரில், "நீ வருத்தப் படாதே; இவ்வளவு நாள் முயன்று நான் எழுதி யிருக்கும் இக்கிரந்தத்திற்கு "**பாமதி**" என்று உன் பெயரையே வைக்கிறேன். உன் பெயரும் என் பெயரும் இப்புஸ்தகம் இருக்கும் வரையில் உலகத் தில் இருக்கும்" என்று அனுக்ரஹித்து அந்த வ்யாக் யானத்திற்கு '**பாமதி**' என்று பெயரிட்டார்.

## 23. ஏகநாதர்—ஜனார்த்தனர்

ஏகநாதர் மகாராஷ்ட்ர தேசத்தவர். பாகவ தத்தை மகாராஷ்டிர பாஷையில் இயற்றியிருக்கி ரூர். இவர் மகாபக்தர். இவருடைய குருவான



ஏகநாதர்-ஜனார்த்தனர்

ஜனார்த்தனர் ராஜாவிடம் மந்திரியாயும் சேனாதிபதி யாயும் இருந்தவர். ஏகநாதர் அனேக அபங்கங்கள் எழுதியிருக்கிறார். அநேகமாய் எல்லாவற்றிலும் "குருஏக ஜனார்த்தன"என்று தன் பெயரையும் தன் குருவின் பெயரையும் சேர்த்தே முத்திரை வைத்தி

ருக்கிறார். "எல்லாவிதமான சிந்தைகளையும் விட்டு விட்டு 'ஹரிநாமம்' ஜபித்துக்கொண்டிரு" என்று உபதேசிக்கிறார்.

## 24. சிவாஜி-சமர்த்த ராமதாஸ்

**ராமதாஸ்:** இவர் ஒரு பெரிய மகாராஷ்ட்ர பக்தர். ஞானியுங்கூட. தன் சிஷ்யர்களுக்காக தாஸபோதம் மானஸபோதம் என்னும் மகாராஷ்ட்ர கிரந்தங்கள் எழுதியிருக்கிறார். மகாராஷ்ட்ர பாஷை யில் அனேக கீர்த்தனங்களும் எழுதியிருக்கிறார்.



சிவாஜி, ராமதாஸ்

இவர் சிவாஜிக்குக் குரு. சிவாஜி அவருடைய ராஜ்யம் முழுவதையும் இவருக்கு அர்ப்பணம் செய்துவிட்டு இவருடைய பிரதிநிதியாகவே இருந்து பரிபாலித்து வந்தார். ஆந்திர தேசத்திலும் ஓர் ராமதாஸ் இருந்தார். ஆகையினால், இவருக்கு சமர்த்த ராமதாஸ் என்று பெயர் ஏற்பட்டிருக்

கிறது. இவரது சிஷ்ய மடங்கள் அநேகம் இப்போதும் தஞ்சாவூரில் இருக்கின்றன.

## 25. சதாசிவ ப்ரம்மேந்திராள்-புதுக்கோட்டை ராஜா

சதாசிவ ப்ரம்மேந்த்ராள் ஒரு பெரிய யோகி. தஞ்சாவூர் ஜில்லாவில் திருவிசநல்லூரில் பிறந்தவர். இவர் காமகோடி பீடாதிபதியாய் இருந்த



புதுக்கோட்டை ராஜா-ஸ்ரீ சதாசிவர்

வரும் திருவெண்காட்டில் ஸித்தியடைந்திருப்பவருமான பரமசிவேந்திரர்களின் சிஷ்யர். இவர் ப்ரம்ம சூத்ர பாஷ்யத்திற்கு 'ப்ரம்ம தத்வ ப்ரகாசிகா' என்று ஒரு வ்ருத்தி எழுதியிருக்கிறார். அதைத் தவிர இவர் அத்வைத சம்பந்தமாக 'ஆத்ம வித்யா விலாசம்' சித்தாந்த கல்பவல்லி" முதலிய அனேக கிரந்தங்கள் எழுதியிருக்கிறார். பக்தி விஷயமாயும் வேதாந்த விஷயமாயும் கீர்த்த

னங்கள் பாடியிருக்கிறுர். இவர் காவேரி தீரத்தில் நெரூர் என்னுமிடத்தில் சித்தியடைந்தார். இவர் புதுக்கோட்டை ராஜாவுக்குக் குரு. அவர் புதுக் கோட்டை ராஜாவுக்கு உபதேசம் செய்வதை இச் சிலை காட்டுகிறது.

## 26. துளசிதாசர்

இவர் வட தேசத்தவர். இவர் மணமாகி இல்லறம் நடத்தி வருகையில் ஒரு சமயம் தன் தாய் வீட்டிற்குச் சென்றிருந்த தன் மனைவியைப் பார்க்க வேண்டுமெண்ணத்துடன் நடு நிசியில் கிளம்பி அவளிருக்குமிடம் சென்று கதவு திறக்கப்படாததால், வீட்டின் பேரில் ஏறி அங்கு முற்றத்தில் தொங்கிக் கொண்டிருந்த ஒரு பாம்பைக் கயிறு என்று நினைத்து அதைப் பிடித்துக் கொண்டு இறங்கி உள்ளே சென்றுர். இவரைப் பார்த்த இவர் மனைவி "நீங்கள் எப்படி வந்தீர்கள்" என்று கேட்க "வீட்டின் மேல் ஏறி நீ கட்டி வைத்திருந்த கயிற்றைப் பிடித்துக்கொண்டு இறங்கி வந்தேன்" என்று சொன்னுர். அதன்பேரில் விளக்கை கொண்டு போய்ப் பார்க்க அது ஒரு பாம்பாய் இருக்கக் கண்டு, "இப்படியும் என் பேரில் இவ்வளவு காமம் ஏற்படலாமா? இவ்வளவு காமம் பகவானிடத்தில் ஏற்பட்டால், எவ்வளவோ நல்ல கதி அடையலாமே" என்று அவர் மனைவி சொல்ல, உடனே அவருக்கு வைராக்கியம் ஏற்பட்டுவிட்டது. ஒரு சமயம் ஹனுமான் இவருக்கு ப்ரத்யக்ஷமாகவே அவர் மூல்யமாய் இவருக்கு ராமதரிசனம் ஏற்பட்டதாகவும் தெரிகிறது. ஸ்ரீ ராம சரித்திரம் முழுவதையும் ஹிந்தி பாஷையில் **ராம சரித**

**மானஸம்** என்ற பெயரில் ஓர் நூலாய் எழுதியிருக்கிறார். ஹிந்தி பாஷையில் அநேக கீர்த்தனங்களும் எழுதியிருக்கிறார். வடதேசத்தில் ஹிந்தி பேசுபவர்களில் இவருடைய **ராமசரித மானஸத்தையும் கீர்த்தனங்களையும்** பாடாதவர்கள் இரார்.

## 27. கிருஷ்ண சைதன்யர்

ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் வங்காள தேசத்தில் நவத்வீபம் என்னுமிடத்தில் பிறந்தவர். இவர் பூர்வாச்ரம பெயர் 'நிமாய்'. அவர் ஒரு பெரிய நியாய சாஸ்த்ர பண்டிதராயிருந்தார். ஒரு சமயம் அவர் பூரிக்குச் சென்றார். அங்கு ஜகந்நாதரைப் பார்த்ததும் அவருக்கு ஒரு விதமான பரவசம் ஏற்பட்டு மெய் மறந்து கீழே விழுந்து விட்டார். அதற்குப் பிறகு அவருக்கு ஒரே பக்தி பரவசம் ஏற்பட்டு எப்போதும் ஹரிபஜனை செய்து கொண்டிருந்தார். பக்தி மார்க்கத்தைப் பரப்புவதற்கு க்ரஹஸ்தராய் இருப்பதை விட சன்யாஸம் வாங்கிக் கொண்டால் சௌகர்யமாயிருக்கும் என்று அவருக்குத் தோன்றியதால், அவர் 'ஈசுவரபுரி' என்பவரிடம் சன்யாஸம் க்ரஹித்துக் கொண்டார். அதற்குப் பிறகு, அவருக்கு **'கிருஷ்ண சைதன்யர்'** என்ற பெயர் ஏற்பட்டது. அவருடைய முக்கியமான கொள்கை இக்கலியில் பகவன் நாமம் ஒன்றுதான் நற்கதி அளிக்கக் கூடியது என்பதுதான். ப்ருந்தாவனத்தில் கிருஷ்ணன் எங்கெங்கு எந்த எந்த லீலைகள் செய்தார் என்று அவர் கண்டு பிடித்ததாகச் சொல்லப்படுகிறது. அவருடைய அந்திமகாலத்தை அவர் பூரி

ஜகந்நாதத்திலேயே கடந்திருர். இவருடைய கொள்கையைப் பின்பற்றி சைதன்ய மதம் என்று ஒரு பிரிவு இருக்கிறது. வங்காளத்தில் சைதன்ய மதத்தைச் சேர்ந்தவர்கள் அதிகம். இவர் ஒரு மத க்ரந்தமும் செய்யவில்லை. ஆனுல் இவருக்கு முக்ய சிஷ்யர்களான ஸநாதனகோஸ்வாமி, ரூபகோஸ்வாமி என்பவர்கள் பக்தி சாஸ்த்ர சம்பந்தமான க்ரந்தங்கள் எழுதி யிருக்கிருர்கள். சைதன்ய ஸம்ப்ரதாயத்தை ஒட்டி, ப்ரம்மசூத்திரத்திற்கு ஒருபாஷ்யமும் இருக்கிறது.

## 28. மதுசூதன சரஸ்வதி—பலபத்ரர்

மதுசூதன சரஸ்வதி ஒரு பெரிய அத்வைத மத க்ரந்த கர்த்தா. இவர் வங்காள தேசத்தவர். அத்வைத சித்தி, அத்வைதரத்ன ரக்ஷணம், கூடார்த்த தீபிகை,



பலபத்ரர்-மதுசூதன சரஸ்வதி

சித்தாந்தபிந்து முதலிய அத்வைத சாஸ்த்ரத்தில் மிகவும் முக்கியமான கிரந்தங்கள் எழுதியிருக்கிருர்.

இவ்வளவு அத்வைதப் பற்றுள்ளவராயிருந்தாலும், அவருடைய மனது புல்லாங்குழல் ஊதும் 'ஸ்ரீ கிருஷ்ணனால் இழுக்கப்பட்டது.' கிருஷ்ணாத் பரம்கிமபிதத்வமஹம் ந ஜானே; கிருஷ்ணனைக் காட்டிலும் வேறு எனக்குத் தெரியாது என்று கீதா வ்யாக்யானமாகிற கூடார்த்த தீபிகையில் சொல்லி யிருக்கிறார். "நிர்க்குணமாயிருக்கிற ப்ரம்மத்தைப் பற்றி த்யானம் செய்து தெரிந்து கொள்பவர்கள் தெரிந்து கொள்ளட்டும். என் மனது யமுனா நதிக் கரையில் சஞ்சரிக்கின்ற கறுப்பு வர்ணமுள்ள வஸ்துவின்பேரில் தான் செல்லுகிறது" என்றும் எழுதி யிருக்கிறார். 'பலபத்ரர்' என்ற சிஷ்யருக்காக 'சித்தாந்த பிந்து' என்ற க்ரந்தம் எழுதியிருப்ப தாகச் சொல்லியிருக்கிறார். "கிருஷ்ணனைக் காட்டி லும் வேறு எனக்குத் தெரியாது" என்று அவர் சொல்வது இங்குக் காட்டப் பட்டிருக்கிறது பலபத்ரருக்கு சித்தாந்த பிந்து கொடுப்பதும் காட்டப்பட்டிருக்கிறது.

## 29. தியாகய்யர்

தியாகய்யர் திருவாரூரில் பிறந்தவர். ஆகை யினால் தான் அவருக்குத் தியாகராஜன் என்று பெயர். இவர் ஒரு பெரிய ராமபக்தர். ஆந்த்ர பாஷையில் ஆயிரக் கணக்கான கீர்த்தனங்கள் பக்திரசம் ததும்ப எழுதியிருக்கிறார். ஒரு சமயம் நாரதர் ப்ரத்யக்ஷமாக வந்து அவரிடம் ஓர் சங்கீத கிரந்தம் கொடுத்ததாகச் சொல்லப்படுகிறது. இவர் பாடிக்கொண்டிருக்கும் பொழுது ஸ்ரீ ராமர் ஸீதா

லக்ஷ்மணர் சகிதம் அவருக்குத் தரிசனம் கொடுத்த தாகச் சொல்லப்படுகிறது. இவர் காவேரி தீரத்தில் திருவையாற்றில் வசித்து சன்யாசம் வாங்கிக் கொண்டு அங்கேயே சித்தியானார். அவருக்கு இப் போது ஒவ்வொரு வருஷமும் புஷ்ய (தை) பகுள பஞ்சமியில் ஸங்கீத வித்வான்கள் எல்லாரும் சேர்ந்து திருவையாற்றில் ஆராதனை நடத்துகிறார் கள்.

## 30. பட்டினத்தார் - பத்ரகிரியார்

பட்டினத்துப் பிள்ளை என்பவர் காவேரிபூம்பட்டி னத்தைச்சேர்ந்தவர். ஆகையினால், தான் இவருக்குப் பட்டினத்தார் என்று பெயர் ஏற்பட்டது. இவருக்கு இயற்கையாய் ஏற்பட்ட பெயர் காவேரிபூம்பட்டினத் திற்குச் சமீபத்திலுள்ள திருவெண்காட்டில் எழுந் தருளியிருக்கும் சிவபெருமான் பெயராகிய சுவே தாரண்யர். சிவபெருமானும் குபேரனும் ஒருசமயம் காவேரிப்பூம்பட்டினத்தை அடைந்ததாயும் அந்தப் பட்டினத்தின் சிறப்பைப் பார்த்த குபேரனுக்கு அந்த நகரத்தின் பேரில் ஆசை ஏற்பட்டதாயும் அதன் பேரில் சிவபிரான் அவனை அங்கே பிறக்கச் சொன்ன தாயும் அவருடைய பிரார்த்தனையின் பேரில் தான் அவரைச் சமயத்தில் தடுத்தாட்கொள்வதாகச் சொன் னதாகவும் பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். வயது வந்தபிறகு அவர் வியாபாரம் செய்துவந்தார். ஆனால் அவருக்கு புத்திர பாக்கியம் இல்லாததினால், சிவபிரானைப் பிரார்த்தனை செய்துகொண்டிருந்தார். பிறகு அவர் வேறு ஒருவர் மூலியமாய்த் தன்னிடம் சேர்க்கப்பட்ட ஒரு குழந்தையை வளர்த்துப்பெரியவ

ஞுக்கி அவனிடம் தன் வியாபாரத்தை ஒப்புவித்தார். அவன் ஒருதரம் வியாபாரம் செய்துகொண்டு வரும் சமயம் கூடப் போனவர்கள் எல்லோரும் திரவியம் சேர்த்துக்கொண்டுவர இவன் மட்டும் வரும்போது பெட்டி நிறையத் தவிடுகொண்டு வந்தாளும். இதைப் பார்த்த பட்டினத்தாருக்குத் தன் பிள்ளையிடம் கோபம் ஏற்பட்டது. அவனைக் கோபித்துக்கொண்டார். அவன் தன் தாயாரிடம் ஒரு பெட்டியைக் கொடுத்து இதைத் தகப்பனுரிடம் கொடு என்று சொல்லி விட்டு மறைந்து போய்விட்டான். பட்டினத்தார் தன் மகன் கொடுத்துப்போன பெட்டியைத் திறந்து பார்க்க, தவிடெல்லாம் தங்கப்பொடியாகத் தெரிந்தது. அதில் ஒரு சீட்டும் இருந்தது. அந்தச் சீட்டில் "காதற்ற ஊசியும் வாராது காணும் கடை வழிக்கே" என்று எழுதியிருந்தது. சீட்டில் எழுதப்பட்டிருந்ததைப் படித்ததும் பட்டினத்தாருக்கு வைராக்கியம் உண்டாகி, தன் சொத்துக்களையெல்லாம் ஏழைகளுக்குத்தானம் செய்து விட்டு, தான் ஒருகோவணத்துடன் துறவியாய்க் கிளம்பி ஊர் ஊராய்ச் சென்று சிவ தரிசனம் செய்துகொண்டுவந்தார். இவர் அனேக பாடல்கள் பாடியிருக்கிருர். அவைகளில் வைராக்கியம் பொங்கி வழிகிறது. பிற்காலத்தில் இவருக்குப் பத்திரகிரியார் என்று ஒரு சிஷ்யர் ஏற்பட்டார். பட்டினத்தார் தம் ஆயுட்கால முடிவில் சென்னையைச் சேர்ந்த திருவொற்றியூரில் ஈசனுடனும் கலந்தார். இச்சிலையில் பட்டினத்தாரும் பத்ரகிரியாரும் காணப்படுகின்றனர்.

---

**ஸ்ரீ சங்கர மண்டபத்துக்குத் தென் பாகம் சுவரில் மேல் கோடியிலிருந்து வடவண்டைச் சுவர் மேல்கோடி வரை (1–18)**

# IV. புண்ணியவதிகள்

## 1. ஔவையார்

இவர் சோழ நாட்டில் உறையூரில் பகவன் என்பவருக்கும் ஆதி என்பவளுக்கும் பிறந்தவர். பிறந்தவுடனே பெற்றோர்கள் அவர்கள் ஏற்கெனவே ஏற்



ஔவையார்

படுத்திக்கொண்டிருந்த கட்டுப்பாட்டின்படி குழந்தையை விட்டுவிட்டுச் செல்ல வேண்டுமே என்று துக்கிக்க,

> ''இட்டமுடன் என் தலையில் இன்னபடி என்றெழுதி
> விட்ட சிவனும் செத்துவிட்டானோ?—முட்டமுட்ட
> பஞ்சமே யானாலும் பாரமவ னுக்கன்றோ
> நெஞ்சமே அஞ்சாதே நீ''

என்று சொன்னவள். தமிழில் அநேக சிறு நீதி நூல்கள் செய்திருக்கிருள். இவளுடைய நூல்கள் சமீப காலம் வரை பள்ளிக்கூடங்களில் சிறுவயதிலேயே குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்டு வந்தன. இவள் அக்காலத்தில் எல்லா அரசர்களாலும் நன்கு பாராட்டப்பட்டவள். ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி, விநயாகர் அகவல் முதலிய அநேக தமிழ் நூல்கள் இவரால் எழுதப்பட்டவை. இவர் சுந்தரமூர்த்தி சுவாமியுடன் கைலே செல்ல விரும்பி ஒருசமயம் விநாயகருக்கு வேகமாய்ப் பூஜை செய்ய, இதைக் கண்ட விநாயகர் "ஏன் இவ்வளவு அவசரம்" என்று கேட்க, "சுந்தரமூர்த்தியுடன் கைலேக்குப் போகவேண்டும்" என்று சொல்லவே, விநாயகர், "நீ சாவகாசமாய் உன் பூஜையைச் செய்; சுந்தரருக்கு முன் உன்னைக் கைலாசத்தில் சேர்த்து விடுகிறேன்" என்று சொல்லி, அவருடைய தும்பிக் கையில் அவளைத் தூக்கிக் கைலேயில் சேர்த்துவிட்டார். அதையே இச் சிலை காட்டுகிறது.

## 2. வாசுகி

**வாசுகி** திருக்குறள் எழுதிய திருவள்ளுவரின் பத்னி. மகா பதிவ்ரதை. ஒரு சமயம், ஒருவர் திருவள்ளுவரிடம் வந்து, 'இல்லறம் பெரிதா, துறவறம் பெரிதா' என்று கேட்டார். அந்தச் சமயத்தில் திருவள்ளுவர் தன் வீட்டில் கிணத்தடியில் குடத்தில் தண்ணீர் இழுத்துக் கொண்டிருந்த தன் மனைவி வாசுகியைக் கூப்பிட்டார். அவள் அப்படியே உடனே பாதி இழுத்த குடத்தை விட்டுவிட்டு

வந்து விட்டாள். குடம் பாதி இழுக்கப்பட்டது அப்படியே கிணற்றில் நின்றது. இதை வந்தவருக்குக் காண்பித்து, "இம்மாதிரி பத்னி இருந்தால், இல்லறம் மேல். இல்லாவிடில், துறவறம் மேல். "பர்த்தாவுக் கேற்ற பதிவ்ரதை யுண்டானல் எந்நாளும் கூடி வாழலாம். சற்று ஏறுமாறாக இருப்பாளே யாமாகில் கூறாமல் சன்யாசம் கொள்" என்று சொன்னதாகச் சொல்லப்படுகிறது. பகலில் அவர் நூல் நூற்றுக்



வாசுகி

கொண்டிருக்கும்போது, நூற்கும் நாழி கீழேவிழ, அவர் அவளை விளக்கைக் கொண்டுவரச் சொன்னர். "பகலாயிற்றே, வெளிச்சம் இருக்கிறதே, விளக்கெதற்கு என்று" கேட்காமல், உடனே அவள் விளக்கைக் கொண்டுவந்தாள். பழைய சாதம் சாப்பிடும்போது அன்னம் சுடுகிற தென்றார். விசிறி கொண்டு விசிறினள். அன்னம் பரிமாறுமுன் நீரும் ஊசியும் வைக்கச் சொன்ன சந்தேகத்தை அவளுடைய மரண

காலத்தில் கேட்க, ''பரிமாறும்போது, ஏதாவது அன்னம் வெளியில் விழுந்தால், ஊசியால் அதை எடுத்து, ஜலத்தில் சுத்தம் செய்ய வேண்டும் என்று வைக்கச் சொன்னேன். ஒரு நாளும் அப்படி ஏற்படவில்லை. அவ்வளவு கவனமாய் நீ பரிமாறியிருக்கிருய்'' என்று அவர் சொன்னுர். அவளிறந்த பிறகு, திருவள்ளுவர் அவளிறந்ததைப்பற்றி,

''அடிசிற்கினியாளே, அன்புடையாளே,
படி சொல் கடவாத பாவாய், அடிவருடிப்
பின் தூங்கி முன்னெழும் பேதையே, போதியோ,
என் தூங்கும் என்கண் இரா''

என்று சொல்லித் துக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. இந்தச் சிலையில் வாசுகி கிணற்றில் குடத்தை விட்டு விட்டு வருவதும் திருவள்ளுவரும் அவருடன் சந்தேகம் கேட்டவரும் காட்டப்பட்டிருக்கிறது.

## 3. கண்ணகி

இவளுக்குப் பத்தினித் தெய்வம் என்று பெயர் உண்டு. இவள் கோவலன் மனைவி. கோவலன மாதவி என்னும் வேசி வசப்பட்டு, சொத்துக்களை எல்லாம் இழந்து, பிறகு கண்ணகியுடன் மதுரையை அடைந்தான். அங்கு ஒருநாள் வியாபாரத்தில், தன் மனைவியான கண்ணகியின் கால்சிலம்பொன்றை விற்பதற்காகக் கொண்டு போய் ஒரு தட்டானிடம் காட்டினன். அந்தத் தட்டான் கோவலன் அரசியின் சிலம்பைத் திருடினன் என்று அவன் பேரில் குற்றம் கூறி, அவனை அரச

ளிடம் சேர்க்க, அரசன் சரியாய் விசாரிக்காமல் கோவலனுக்கு மரண தண்டனை விதித்தனன். இதை யறிந்த கண்ணகி அரச சபைக்கு வந்து கோவலன் கொண்டுவந்தது தன்னுடைய சிலம்பென்று அரச னுக்குத் தெரிவித்தனள். தான் இப்படிச் சரியாய் விசாரிக்காமல் கோவலனுக்கு மரண தண்டனை விதித்துவிட்டதைக் குறித்து வருத்தப்பட்டு



கண்ணகி

அங்கேயே அரசன் உயிர்போய் விட்டது. பின், கண் ணகி தன் பதிவ்ரதாக்னியினால் மதுரையை எரித்து விட்டு, மலையேறித் தன் கணவனுடன் சுவர்க்கத்தை அடைந்தனள். இவளை இன்றும் அநேக இடங் களில் பத்தினிக் கடவுள் என்று போற்றி வருகின் றனர். இந்தச் சரித்திரத்தையே இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் விஸ்தாரமாய் எழுதியிருக் கிறார்.

## 4. அருந்ததி

இவள் கர்தம ப்ரஜாபதியின் புத்ரிகளுள் ஒருத்தி. கர்தமர் இவளை வசிஷ்டருக்கு விவாகம் செய்து கொடுத்தார். இவள் மகா பதிவ்ரதை. "இவளைப் போல், நீயும் பதிவ்ரதையாய் இருக்க வேணும்" என்பதற்காக மணமகன் விவாக தினத் தன்று இரவில் ஆகாயத்தில் இவளை மணமகளுக்கு காட்டுதல் மரபு. ஆகாயத்தில் ஸப்த ரிஷிமண்டலத்



அருந்ததி

தில் வசிஷ்ட நக்ஷத்ரத்திற்குச் சமீபத்தில் இவள் நக்ஷத்ரமாய் ப்ரகாசிக்கிருள். நக்ஷத்ரரூபத்திலும் இவளைக் காண்பது மிகவும் கஷ்டம். முதலில் இவளுக்கு ஸமீபம் இருக்கிற நக்ஷத்ரங்களைக் காட்டிய பிறகு இதல்ல, இதல்ல என்று சொல்லி மிகவும் சூக்ஷமமாயுள்ள இந்தநக்ஷத்ரத்தைக் காண்பிப்பார்கள். இதை ஒட்டியே "ஸ்தூல அருந்ததி நியாயம்' என்று ஒரு நியாயம் ஏற்பட்டிருக்கிறது. ஒரு சமயம் அக்னி ஸப்தரிஷிகளின் பத்னிகளைக் கண்டு மையல்

கொள்ள அதையறிந்த அக்னியின் பத்னியாகிய **ச்வாஹா தேவி** என்பவள் மற்ற மஹரிஷிகளின் பத்னிகளின் ரூபத்தைத் தரித்து அக்னியை சந்தோஷிப்பிவித்தாள். ஆனல் வசிஷ்ட பத்னியாகிய அருந்ததியின் ரூபத்தை அவளால் தரிக்க முடியவில்லே. இந்தச் சிலேயில் வசிஷ்டர் ஆச்ரமத்தில் அக்னிஹோத்ர சாலேயில் வீற்றிருக்கிருர். அருந்ததி அவருடைய அக்னிஹோத்திற்காக நந்தினி பசுவினிடத்திலிருந்து பாலேக் கறந்து எடுத்துக் கொண்டு வருகிருள்.

## 5. அனுஸூயை

இவள் அத்ரிமகரிஷியின் பத்னி. மகாபதிவ்ரதாசிரோமணி. சீதை வனம்சென்ற சமயம், இவளேச் சந்தித்து வழிபட்டு இவளால் பாதிவ்ரத்



அனுஸூயை

யத்தின் மகிமையைச் சொல்லக்கேட்டு, இவளால் அநேக ஆபரணங்கள் கொடுக்கப்பட்டு ஆசிர்

வதிக்கப்பட்டாள். ஒரு காலத்தில், அனேக வருஷங்கள் மழையில்லாது ஜனங்கள் கஷ்டப்பட தன்னுடைய பதிவ்ரதா மகிமையினால், மழையை வரவழைத்தவள். பிரம்ம விஷ்ணு ருத்ரர்கள் இவர்களை சந்திரன், தத்தாத்ரேயர், துர்வாசர் என்ற மூன்று குமாரர்களாய்ப் பெற்றவள். ஒருசமயம் த்ரிமூர்த்திகளும் அவளுடைய பாதிவ்ரத்யத்தை பரீக்ஷிக்கவேண்டு மென்னும் நோக்கத்துடன் அவளிடம் பிராம்மண வேஷத்துடன் சென்று பிச்சை கேட்டனர். அவள் சரி என்றாள். அவர்கள் "நீ நிர்வாணத்துடன் பிக்ஷயிடவேண்டும்" என்று சொல்லவே, சரி என்று சொல்லி, தன்னுடைய பதிவ்ரதா தர்மத்தின் மகிமையினால், அவர்களை மூன்று குழந்தைகளாகச்செய்து பால் கொடுத்து, தொட்டிலிலிட்டாள். தங்கள் பதிகளைக் காணாத சரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி ஆகிய மூவர்களும் நாரதரால் இந்த விபரம் தெரிந்து கொண்டு, அவ்விடம் வந்து, தங்கள் பதிகளைத்தர வேண்டுமென்று வேண்டினார்கள். இந்த விபரம் இந்தச் சிலையில் காட்டப்பட்டிருக்கிறது.

## 6. லோபாமுத்ரை - காவேரி

இவள் ஒரு மகாபதிவ்ரதை. அகஸ்த்யரின் மனைவி. பெரிய தேவி பக்தை. இவள் தான் லோகத்திற்கு உபகாரமாயிருக்க வேண்டுமென்று தன் ஒரு அம்சத்தால் அகஸ்த்யருடன் இருப்பதாகவும், மற்றொரு அம்சத்தால் ஒரு நதி ரூபமாயிருந்து லோகானுக்ரஹம் செய்வதாயும் அகஸ்த்யரிடம் உத்திரவு பெற்று, அப்படியே காவேரி ரூபத்தை

அடைந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அகஸ்த்யரின் கமண்டுலுவில் இருந்த ஜலத்தைக் கணபதி ஒரு



லோபாமுத்ரை, காவேரி

காக்கை ரூபம் கொண்டு கவிழ்த்துவிட்டதாகவும் அத்துடன் இவளும் சேர்ந்து காவேரியாய் ப்ரவஹித்ததாயும் சொல்லப்படுகிறது.

## 7. மண்டோதரி

இவள் ராவணனின் பத்னி. மகாபதிவ்ரதை. காலையில் ஸ்மரிக்க வேண்டிய பஞ்ச கன்யைகளில் ஒருத்தி; மகாரூபவதி. ஹனுமான் லங்கையில் புகுந்து சீதையைத் தேடும் போது, அந்தப்புரத்தில் ஒளிந்து கொண்டு பார்க்கையில், ஓரிடத்தில் ஒரு கட்டிலில் ராவணனும், பக்கத்தில் மற்றொரு கட்டிலில் மண்டோதரியும் படுத்திருந்ததைப் பார்த்து, அவளுடைய ரூபத்தைக் கவனித்ததில், இவள்தான் சீதையோ என்று சந்தேகப்பட்டார். பிறகு தனக்குள்ளே யோசித்து ராமனை விட்டுப்

பிரிந்த ஸீதைக்குத் தூக்கம் எப்படி வரும் என்று நினைத்து மனதைச் சமாதானம் செய்து கொண்டார். இவள் ராமனுடைய நிஜஸ்வரூபத்தை அறிந்தவள். ராவணஸம்ஹாரம் ஆனபிறகு, "ராமன் சாக்ஷாத் விஷ்ணு" என்று கூறுகிருள். "சீதை எந்த விதத்



மண்டோதரி

திலும் எனக்கு மேற்பட்டவளில்லை. ஆனுல், என் துரதிர்ஷ்டம் உனக்குப் பிறர் மனைவியின் பேரில் ஆசை ஏற்பட்டு அதினுல், உனக்கு மரணமேற்பட்டது" என்று சொல்லி, வருத்தப்படுகிருள். ராவணனும் மண்டோதரியும் அந்தப்புரத்தில் படுத்திருப்பதையும், ஒரு ஜன்னல் வழியாய் ஹனுமார் எட்டிப் பார்ப்பதையும் இந்தச்சிலை காட்டுகிறது.

## 8. சீதை

சீதை ராமரின் பத்தினி என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். அயோனிஜையாய் ஜனக மகாராஜன் யாக பூமியை உழுதசமயம் பூமியிலி

ருந்து வெளி வந்தவள். ராமன் தகப்பனார் வார்த்தைக்குக் கீழ்படிந்து காட்டுக்குச் சென்றபோது ராமனுடன் காட்டிற்குச் சென்றவள். காட்டில் மகா பதிவ்ரதையான அனுசூயையைக் கண்டு அவளிடம் ஆடையாபரணங்கள் ஆசீர்வதிக்கப்பட்டவள். ராவணன் அவளை இலங்கைக்குக் கொண்டுபோய், அசோகவனத்தில் வைத்திருக்கும்போது, ஸதாஸர்வ



சீதை

காலமும், ராமனையே நினைத்துக் கொண்டு அவருடைய நாமத்தையே சொல்லிக் கொண்டிருந்தாள். ஹனுமார் அசோகவனத்தில் அவளைக்கண்டு ராமனுடைய விருத்தாந்தங்களைக் கூறி, "இப்போதே உங்களை ராமனிடம் சேர்த்து விடுகிறேன்" என்று சொன்ன சமயம், "நான் ஸ்ரீ ராமனுடைய சரீரத்தைத் தவிர வேறு ஒருவர் சரீரத்தையும் தொடேன்" என்று சொன்னவள். ராவண சம்ஹாரத்துக்குப் பிறகு தன்னுடைய பாதிவ்ரத்யத்தைக் காண்பிக்க அக்னி ப்ரவேசம் செய்தவள். தன்னுடைய

டாதிவ்ரத்ய மகிமையினால், ராவணனை சம்ஹாரம் செய்யாமல் ராவண சம்ஹாரம் செய்த கௌரவம் ஸ்ரீ ராமனுக்கு வரவேண்டுமென்றிருந்தாள். இந்தக் கருத்தை, 'மாஜானகி' என்ற கீர்த்தனத்தில் தியாகய்யர்வெகு அழகாய்ப் பாடியிருக்கிறார் அசோக வனத்தில் அவள் துக்கப்பட்டுக்கொண்டிருக்கும் சமயம் விபீஷணனின் பெண்ணாகிய த்ரிஜடை தான் நல்ல ஸ்வப்னங்கள் கண்டிருப்பதாகவும், சீதைக்குச் சீக்கிரம் நல்ல காலம் பிறக்கப் போகிறதென்றும் அவளைத் தேற்றிக்கொண்டிருக்கிறதைக் காண்பிக்கிறது இந்தச் சிலை.

## 9. சபரி

இவள் வேட ஜாதியைச் சேர்ந்தவள். மதங்க ரிஷியின் சிஷ்யை. அவருக்கு சிச்ரூஷை செய்து



சபரி

கொண்டிருந்தாள். அவர் ஸ்வர்க்கம் போகும் சமயத்தில், "நீ, இங்கே இரு. ஒருசமயம் மகாவிஷ்ணு

வின் அவதாரமாக ஸ்ரீ ராமன் இங்கு வருவார். அவருக்கு வேண்டிய உபசாரங்கள் செய்துவிட்டு நற்கதி அடைவாய்'' என்று ஆசீர்வதித்துச் சென்ருர். அவள் காட்டில் நல்ல பழங்களாய்ப் பார்த்து ஸ்ரீ ராமனுக்கென்று வைத்திருந்தாள். ஸ்ரீ ராமன் சீதையைத் தேடிக்கொண்டு வரும் சமயத்தில் அவருக்குப் பழங்கள் கொடுத்து அவர் முன்னிலையிலேயே நற்கதி அடைந்தாள். இதை "எந்தனி வர்ணிந்துனு சபரீ பாக்யம்'' என்னும் கீர்த்தனத்தில் தியாகய்யர் சொல்லுகிருர். ஸுக்ரீவனிருப்பிடத்தை ராமனுக்குத் தெரிவித்தவள். அவள் ராமனுக்குப் பழம் கொடுப்பது இங்கு காண்பிக்கப்பட்டிருக்கிறது.

## 10. சந்த்ரமதி

இவள் அரிச்சந்த்ர ராஜாவின் பத்னி. மகாபதிவ்ரதை. இவள் பிறந்தபோதே மாங்கல்யத்துடன்



சந்த்ரமதி

பிறந்ததாகக் கூறப்படுகிறது. அரிச்சந்த்ரன் விச்வாமித்ரரால், அநேக விதமாய்த் துன்புறுத்தப்பட்ட சம

யத்திலும், நாடிழந்து ஊர் ஊராய்த் திரிந்த காலத்திலும், அரிச்சந்திரனை விட்டுப் பிரியாது பின்பற்றி, பின் ஒரு காலத்தில் கணவனால் காசியில் ஒரு ப்ராமணருக்கு அடிமையாய் விற்கப்பட்டு, புருஷனை விட்டுப் பிரிந்து இருக்கையில் புத்திரனையும் இழந்து, புத்ரனைச்சுடலையில் தீயிடும் சமயம் அங்கு சுடலைக்காவல்காரனுயிருந்த தன் புருஷனைக் கண்டு, காசி ராஜன் குழந்தையைக்கொன்று விட்டதாகக் குற்றம் சாட்டப்பட்டு,மரண தண்டனை அடைந்து, அரிச்சந்திரன் அந்தத் தண்டனையைக் கொடுக்க, தன் கழுத்தை நீட்டும்போது தேவர்கள் வந்து தடுத்து, அவர்களுக்கு மறுபடியும் முன்போலிருக்க அனுக்கிரஹித்தார்கள்.

## 11. தமயந்தி

இவள் விதர்ப்ப தேசத்தரசனின் புத்ரி.நளச்சக்கரவர்த்தியின் பத்னி. ஓர் அன்னத்தினுல் நளனுடைய குணங்களைக் கேள்விப்பட்டு நளனையே தன் புருஷனுக மனதில் நிச்சயப்படுத்திக் கொண்டாள். இவளுடைய அழகைக்கேட்ட இந்திரன், அக்னி, வாயு, யமன் முதலியவர்,கள் அவள்மேல் ஆசைகொண்டு நான்குபேரும் நளனுடைய ரூபத்தைத் தரித்துத் தமயந்தியின் சுயம்வரத்திற்குச் சென்றனர். தேவரகளுக்குச் சுவபாவமாய் உள்ள சிலவிசேஷங்களால் தமயந்தி இவர்களைத் தெரிந்து கொண்டு நிஜமான நளனுக்கே மாலையிட்டனள். இதைக் கேட்ட சனீச்வரபகவான் நளனைப் பிடித்து வாட்டினுர். நளன் சூதாட்டத்தில் தன் ராஜ்யத்தை இழந்து, தமயந்தியோடு காட்டிற்குச் சென்ருன். காட்டில் இரு

வரும் படுத்திருக்கையில் நளன் எழுந்து தமயந்தி குத் தெரியாமல் அவளுடைய புடவையில் பாதி யைக் கிழித்து எடுத்துக்கொண்டு அவளை விட்டுப் பிரிந்து போய் விட்டான். பிறகு தமயந்தி அவனைத் தேடிக்கொண்டுபோகையில் காட்டில் ஒரு வேடன் அவளைக் கண்டு, தீய எண்ணத்துடன் அவளை நெருங்க, அவளுடைய பதிவ்ரதாமாகாத்மியத்தால் அவன் எரிந்து போய் விட்டான். பிறகு, சேதி தேசம் சென்று அங்கு அரண்மனையில் கொஞ்சநா ளிருந்தாள்.பின் விதர்ப்ப தேசத்தரசன் அவளிருக்கு மிடம் அறிந்து, அவளைத் தன் அரண்மனைக்கு



தமயந்தி

அழைத்துக் கொண்டுபோய் வைத்துக்கொண்டான். இதன் மத்தியில் நளன் காட்டில் போய்க்கொண்டி ருக்கும்பொழுது கார்க்கோடகம் என்னும் ஸர்ப்பம் அவனைக் கடிக்க நளன் என்று தெரிந்து கொள்ளமுடி யாதபடி அவனுடைய உருவம் மாறிவிட்டது. அந்த உருவத்துடன் அவன் 'ருதுபர்ணன்' என்னும் அர

சன் அரண்மனையை அடைந்து அங்கே சமையற் காரனாக இருந்தான். நளன் வேறு வேஷத்திலிருப் பதை அறிந்த தமயந்தியின் தந்தை தமயந்திக்கு இரண்டாவது சுயம்வரம் என்று ருதுபர்ணனுக்குத் தெரிவித்தனன். ருதுபர்ணன் தேரோட்டுவதில் மிகவும் சாமர்த்தியமுடைய நளனை அழைத்துக் கொண்டு உடனே விதர்ப்பதேசத்தை அடைந்தான். விதர்ப்பதேசத்திற்கு வரும்சமயத்தில் ருதுபர்ணன் நளனிடத்திலிருந்து அசுவவித்யையை அறிந்து கொண்டான். இந்தச் சமயத்தில் சனிபகவானும் நளனிடம், 'நான் உன்னைவிட்டுவிட்டேன். இனி நீ சௌக்கியமாய் இருப்பாய்' என்று சொல்லிவிட்டுப் போனார். வேறு வேடத்திலிருந்த நளனைக் கண்ட தமயந்தி அவனிடம் தன் குமாரர்களை அனுப்பி, அவன் நளன்தான் என்று நிச்சயம் செய்து கொண்டு நளனைத் தருவித்தாள். நளன் அவளைப் பார்த்து, 'இது என்ன இரண்டாம் சுயம்வரம் என்று கேட்க, 'இது உங்களை இங்கு வரவழைக்கச் செய்த உபாயம். இரண்டாவது சுயம்வரம் நிஜமாயிருந் தால் ராஜாக்கள் எல்லாரும் வந்திருக்கமாட்டார் களா' என்று கேட்க, நளனும் சமாதானமடைந்து, தமயந்தியோடும் தன் குழந்தைகளோடும் கொஞ்ச காலம் விதர்ப்ப தேசத்திலிருந்துவிட்டு, பிறகு, தன் நகரத்திற்கு வந்து, அங்கிருந்த புஷ்கரனை ஜயித்து, நெடுநாள் ஆண்டுவந்தான். அன்னபக்ஷி தமயந்தி யுடன் பேசுவது இங்குக் காண்பிக்கப்பட்டிருக் கிறது.

## 12. காந்தாரி

இவள் காந்தாரதேசத்தரசன் மகள். த்ருதராஷ்ட்ரனின் தேவி. துரியோதனனின் தாயார். இவள் தன் கணவன் த்ருதராஷ்ட்ரன் கண் தெரியாதவன் என்று அறிந்ததும் தனக்கும் கண்பார்வைவேண்



காந்தாரி

டாம் என்று தன் கண்களை மறைத்துக்கொண்ட பதிவ்ரதை. இங்கு கண்ணில்லாத த்ருதராஷ்ட்ரனும் கண்ணை மறைத்துக்கொண்டிருக்கும் காந்தாரியும் காணப்படுகிறார்கள்.

## 13. பதிவ்ரதாஸ்திரீ

கௌசிகன் என்னும் பிராம்மணன் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து த்யானம் செய்துகொண்டிருந்தான். ஒருசமயம், அந்த மரத்தின்மேல் உட்கார்ந்திருந்த ஒரு கொக்கு அவன் பேரில் எச்சமிட்டது. அவன் அதை நிமிர்ந்து நோக்கவே, அது எரிந்துவிட்

டது. இதைக் கண்டு தனக்குக் கொஞ்சம் சக்தி ஏற்பட்டிருக்கிறது என்ற கர்வத்துடன் சமீபத்தி லுள்ள ஒரு கிராமத்திற்குச் சென்று பிக்ஷை கேட் டான். ஒரு வீட்டில் கொஞ்ச நேரம் காத்திருக்கும்படி யாய் ஏற்பட்டது. கொஞ்ச நேரம் கழித்து, அந்த வீட்டு அம்மாள் கதவைத் திறந்துகொண்டுவந்தாள். இவ்வளவு காலம் என்னை காத்திருக்கும்படி செய் தாயே' என்று கௌசிகன் அவளைப் பார்க்க, அவள்



பதிவ்ரதாஸ்திரீ

'நான் கொக்கல்ல, கொக்கைப்போல் உன் பார்வை யால் எரித்து விடலாம் என்று நினைக்கிறாயா' என்று கேட்டாள். இதைக் கேட்ட கௌசிகர் அந்த விஷயம் இவளுக்கு எப்படித் தெரியும் என்று ஆச்சரியப்பட, தான் தன்னுடைய பர்த்தாவுக்கு சிச்ரூஷை செய்து கொண்டிருந்ததாயும், ஸ்திரீகளுக்கு பர்த்தாவிற்கு சிச்ரூஷை செய்வதைவிட வேறு தர்மமில்லை என்றும், அதனால்தான் வருவதற்கு தாமதமாயிற்று என்றும் பதிவ்ரதா தர்மத்தினால்தான் அவள் கொக்கை எரித்

ததுதனக்குத் தெரிந்தது என்றும்சொல்லி, இன்னும் ஏதாவது தர்மம் தெரிய வேண்டுமானால், தர்ம வ்யாதனிடம் செல் என்று அனுப்பினாள். இங்கு பிராம்மண ஸ்திரீயும், கௌசிக ப்ராம்மணனும், கொக்கும் காட்டப்பட்டிருக்கிறது.

## 14. நளாயினி

இவள் ஓர் மகா பதிவ்ரதை. இவளை இவருடைய கணவர் அநேக விதமான சோதனைகள் செய்தார். தான் ஒரு குஷ்ட நோயுடையவராகத் தன்னை காட்டிக் கொண்டு, தான் ஒரு தாசி



நளாயினி

வீட்டுக்குப்போக வேண்டுமென்று அவளிடம் சொல்ல, அவளும் அப்படியே அந்தத் தாசியிடம் சென்று பேசி ஒவ்வொரு நாளும் இவரை ஒரு கூடையில் வைத்துத் தலையில் தூக்கிக் கொண்டு போய், அந்தத் தாசி வீட்டில் விட்டுவிட்டு வருவது வழக்கம். அவர் உள்ளே போனதும் அழ

கான ரூபம் எடுத்துக்கொண்டு விடுவர். இப்படி நடக்கும்போது ஒருநாள் அவர் செல்லும் வழியில், பூர்வ கர்மத்தால் கழுமரத்தில், தொங்கிக் கொண்டிருந்த மாண்டவ்ய ரிஷியின் காலில் அந்தக் கூடை பட்டு அவருக்கு அதிக வேதனை உண்டாயிற்று. அவர் "பொழுது விடிந்ததும், இவள் மாங்கல்ய மிழக்கவேண்டும்" என்று சபித்தார். உடனே, இவள் பொழுது விடியாதிருக்க வேண்டும்என்று சபித்தனள். அப்படியே பொழுது விடியாதிருக்க, இதனுல் ஒரு தர்மானுஷ்டானங்களும் நடவாமல் போயின.

தேவர்கள் முறையிட்டதின் பேரில், மாண்டவ்யர் சாபத்தை மாற்றிக் கொண்டார். இவளும் "பொழுது விடியட்டும்" என்ருள். பிறகு இவளுடைய பாதிவ்ரத்யத்தைக் கண்டு சந்தோஷம் அடைந்த இவளுடைய கணவர் அவளுடன் வெகு நாள் சந்தோஷமாயிருந்தனர். இவள் அடுத்த ஜன்மத்தில் காசிராஜன் மகளாய்ப் பிறந்து தபஸ் செய்து பகவானைத் தனக்குப் புருஷனுக வேண்டுமென்று 5 தடவை பிரார்த்தித்தாள். ஆகையினுல், தான், இவள் அடுத்த ஜன்மத்தில் த்ருபத ராஜன் மகளான த்ரௌபதியாகப் பிறந்து பாண்டவர்கள் ஐவரையும் மணந்தாள்.

## 15. ஸாவித்ரி

இவள் அச்வபதி மகாராஜாவின் பெண். சத்யவானின் மனைவி. இவள் விவாகத்திற்குமுன்பே, சத்தியவானைப் பற்றிக் கேள்விப்பட்டு அவனையே

மனத்தால் பதியாக ஸ்வீகரித்துவிட்டாள். ஸத்யவானின் தகப்பனாரான த்யுமத்சேனன் ராஜ்யத்தை இழந்து கண்ணையும் இழந்து காட்டில் வசித்து வந்தார். நாரதரால் சத்யவானுக்குச் சீக்கிரம் மரணம் நேரிடும், அவன் அற்பாயுஸு உள்ளவன் என்று அறிந்தும் சாவித்ரி அவனையே மணந்தனள். எப்போதும் சத்யாவனின் மரணத்தையே எதிர்பார்த்து அதைத் தவிர்க்க விரதமனுஷ்டித்து வந்தனள். சத்யவானுக்கு மரணகாலம் சமீபித்து யம தர்மராஜன் சத்யவானின் ஜீவனைக் கொண்டுபோகும்போது, தன் பதிவ்ரதா தர்ம பலத்தினால் நேரில் யமதர்ம



ஸாவித்ரி

ராஜனுடன் சம்பாஷித்துக்கொண்டே அவன் பின் சென்றனள். யமனிடமிருந்து தன் மாமனாருக்கு ராஜ்யமும், கண்ணும் வரவேண்டுமென்று வரம் பெற்றனள். மறுபடியும், யமனை விடாமல் தன் புருஷன் உயிரைக்கொடுக்க வேண்டுமென்று கேட்க, யமன் "அதைத் தவிர வேறு ஏதாவது கேள்"

என்றார். தனக்குக் குழந்தைகள் பிறக்க வேண்டுமென்று பிரார்த்தித்தாள். யமனும் யோசியாமல் 'சரி' என்று சொல்லிவிட்டார். பிறகு ஸாவித்ரி ஸத்யவான் இல்லாவிடில் தனக்கெப்படி குழந்தைகள் ஏற்படுமென்று கேட்க, அவளுடைய புத்திசாலித் தனத்தைக் கண்டுமெச்சி, ஸத்யவானின் உயிரைக் கொடுத்துவிட்டுப் போனார். இங்கு ஸாவித்ரி, ஸத்யவான் உயிரைக் கொண்டு போகும் யமதர்ம ராஜாவைப் பிரார்த்திப்பது காண்பிக்கப்பட்டிருக் கிறது.

## 16. சுகன்யை

இவள் சர்யாதி மகாராஜாவின் மகள். இவள் ஒருசமயம் தன் தகப்பனருடன் காட்டிற்குச் சென்ற போது 'ச்யவனர்' தபஸ் செய்துகொண்டிருந்த



சுகன்யை

மார்க்கமாய்ச் சென்றனள். அச்சமயம், அவர்மீது ஒரு பற்று ஏற்பட்டிருந்தது. அதற்குள்ளிருந்து அவ

ருடைய கண்கள் மாத்திரம் பிரகாசித்தன. அதைக் கண்டு சுகன்யை அது இன்னதென்று அறியாமல், அதை ஒரு குச்சியினால், குத்தினாள். இதன் பலனாக, அரசனுக்கும் அரசன் சேனைகளுக்கும் அநேக கஷ்டங்கள் ஏற்பட்டன. அரசன் இதைப்பற்றி விசாரிக்கும்போது சுகன்யை தான் செய்த காரியத்தைச் சொன்னாள். அதன் பேரில், சர்யாதி சுகன்யையை அழைத்துக்கொண்டு ச்யவனரிடம் சென்று மன்னிப்புக்கேட்க, ச்யவனர் "உன் பெண்ணை எனக்கு விவாகம் செய்து கொடு" என்று கேட்டார். ராஜா, 'இந்தக் கிழவருக்குத் தன் பெண்ணைக் கொடுக்க வேண்டியிருக்கிறதே' என்று யோசிக்க, சுகன்யை, 'பரவாயில்லை. நம் ஜனங்களுக்கு ஒரு சௌகரியம் ஏற்பட வேண்டும். ஆகையினால், நான் அவரை மணந்துகொள்கிறேன்' என்றாள். அப்படியே அரசனும் அவளை ச்யவனருக்குக் கொடுத்தான். ச்யவனருக்கு அவள் மனம் கோணாமல் சிச்ரூஷை செய்து கொண்டிருந்தாள். அந்த சிச்ரூஷையினால் சந்தோஷம் அடைந்த ச்யவனர் அசுவினி தேவர்களைப் பார்த்து, 'நீங்கள் எனக்கு யௌவனத்தைக் கொடுத்தால், யாகத்தில் அவிர்ப்பாகம் இல்லாத உங்களுக்கு அவிர்ப்பாகம் வாங்கிக் கொடுக்கிறேன்' என்று சொன்னார். அவர்கள் சரி என்று சொல்லி, அவரை அங்கிருந்த ஒரு குளத்தில் ஸ்நானம் செய்யச் சொன்னார்கள். அவருடன் இவர்களும் ஸ்நானம் செய்து ஜலத்திலிருந்து 3 பேரும் ஒரே ரூபத்துடன் கிளம்பினார்கள். வெளியில் வந்து சுகன்யையைப் பார்த்து, 'உன் கணவரை அழைத்துக்கொண்டுபோ'

என்று சொல்ல, சுகன்யை அசுவினி தேவர்களைப் பிரார்த்தித்துக்கொண்டு. ச்யவனரையும் மனதில் த்யானித்துக் கொண்டு. அவர்களில் ஒருவரைத் தொட்டாள். அசுவினிதேவர்களின் அனுக்ரஹத் தாலும், இவளுடைய பாதிவ்ரத்ய தர்மத்தின் மகி மையாலும் ச்யவனரையே இவள் தொட்டாள். அசு வினி தேவர்கள் இருவரையும் ஆசீர்வதித்துச் சென் றூர்கள். கொஞ்ச காலம் சென்ற பிறகு, சர்யாதி மகாராஜா தன் பெண்ணைப் பார்த்துவிட்டுப் போக லாம் என்று அங்கு வர, அவள் ஒரு யௌவன புருஷ னுடனிருப்பதைக்கண்டு கோபித்துக் கொண்டார். சுகன்யை நடந்த விஷயங்களைச் சொல்லி அவரைச் சமாதானப்படுத்திச் சந்தோஷப்படுத்தினுள். சீதை, அனுசூயையுடன் பேசும்போது, 'நான் சுகன்யை எப்படி ச்யவனரைப் பின்பற்றியிருந்தாளோ அம் மாதிரி ராமனைப் பின்பற்றி இருக்கிறேன்' என்று சொல்லுகிறுள். இந்த விஷயமே இங்குக் காண்பிக் கப்படுகிறது.

## 17. சுதக்ஷிணை

இவள் இக்ஷ்வாகுவம்சத்தில் பெயர் போன ரகு மகாராஜனின் தாயார். திலீப மகாராஜாவின் பத்னி. இவர்களுக்கு வெகுகாலம் புத்ர பாக்யம் ஏற் படாததால், குலகுருவான வஸிஷ்டரைப் பிரார்த் திக்க அவர் காமதேனுவின் கன்ருன நந்தினி என்னும் பசுவை ஆராதிக்கும்படி சொன்னுர். அந்தப் படியே ஒவ்வொரு நாளும் திலீபன் நந்தினியை ஓட்டிக் கொண்டுபோய் மேய்த்துவிட்டு ஸாயங்காலம் திரும்புவது வழக்கம். காலையில் கிளம்பும்போது

சுதக்ஷிணை கொஞ்சதூரம் அப்பசுவைப் பின் தொடர்ந்து தீலிபனை அனுப்பிவிட்டு வருவது வழக்கம். அப்படி அவள் செல்வதை காளிதாஸ மகாகவி ரகுவம்சத்தில் "அந்தப் பசுவின் கால் தூளிகளினால் பரிசுத்தமாக்கப்பட்ட வழியில் அவள் அந்தப் பசு



சுதக்ஷிணை

வைத் தொடர்ந்து சென்றது ஸம்ருதிகள் ஸ்ருதியின் கருத்தையே பின்பற்றிச் செல்வது போலிருந்தது. (ச்ருதேரி வார்த்தம் ஸம்ருதி ரன்வகச்சத்) என்று சொல்லியிருக்கிறார். இந்த சிலையில் பசுவின் பக்கத்தில் அதை ரக்ஷித்துக்கொண்டு திலீபன் போவது போலவும் சுதக்ஷிணை பசுவின் பின் செல்வது போலவும் காட்டப்பட்டிருக்கிறது.

## 18. ருக்மிணி

ஒரு சமயம் ஸ்ரீ கிருஷ்ணனின் பத்னியான சத்யபாமை நாரத மகரிஷியைப் பார்த்து, "எனக்கு எந்த ஜன்மத்திலும் கிருஷ்ணனே பதியாய் வரவேண்டும்;

அதற்கு என்ன செய்யவேண்டும்" என்று பிரார்த்திக்க, "யாருக்காவது ஸ்ரீ கிருஷ்ணனைத் தானம் செய்தால் உன்னுடைய எண்ணம் நிறை வேறும்" என்று சொன்னார். அதைக் கேட்ட சத்யபாமை பின் என்ன நேரிடும் என்பதை யோசியாமல், கிருஷ்ணனை நாரதருக்குத் தானம் செய்துவிட்டாள். நாரதர் ஒரு மூட்டையைக் கிருஷ்ணன் தலையில் வைத்து "இதைத் தூக்கிக்கொண்டு என்னுடன் வா"



ருக்மிணி

என்று கூப்பிடவே, இதைக் கண்டு பயந்த சத்யபாமை, நாம் யோசிக்காமல், தானம் செய்து விட்டோமே என்று வருத்தப்பட்டு, நாரதரை பிரார்த்திக்க, நாரதர், "இந்த கிஷ்ணனுக்கு சமமாயுள்ள வஸ்து ஏதாவது கொடுத்தால் கிருஷ்ணனை விடுவிக்கிறேன்" என்றார். அதைக்கேட்ட சத்யபாமை ஒரு தாராசில், ஒரு தட்டில் கிருஷ்ணனை வைத்து மற்றொரு தட்டில் தன் அரண்மனையிலுள்ள ஸகல ஆபரணங்களையும் வைத்தாள். எவ்வளவு வைத்தா

லும், கிருஷ்ணன் இருந்த தட்டு கீழேயே போய்க் கொண்டிருந்தது. இதற்குள் இந்த விபரம் தெரிந்து ருக்மிணியைத் தவிர பாக்கி எல்லா கிருஷ்ண பத்தினிகளும் கூடிவிட்டனர். எல்லோரும் பயந்து ருக்மிணியுடன் முறையிட, ருக்மிணி கிருஷ்ணன் இருக்குமிடம் வந்து மற்றொரு தராசில் இருந்த வஸ்துக்கள் எல்லாவற்றையும் கீழே பூமியில் எடுத்து வைத்து விட்டு ஒரு துளசிதளத்தை அந்தத் தட்டில் வைத்தாள். அந்தத் தட்டு கீழேபோய் கிருஷ்ணன் இருந்த தட்டு மேலே போய்விட்டது. ஒரு சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் ருக்மிணியுடன் ஏகாந்தத்தில் இருக்கும் போது, பரிகாசமாய் அவளுடன் ''எவ்வளவோ ராஜாக்கள் உனக்காகக் காத்திருக்க அவர்களுக்குப் பயந்து கொண்டு ஒரு தீவில் வந்து ஒளிந்து கொண்டிருக்கும் என்னைப் பொறுக்கி எடுத்தாயே, இப்பவும் நீ வேறு யாரிடம் வேண்டுமானாலும் போகலாம்'' என்று சொல்ல, இதைக் கேட்டதுமே ருக்மிணி ஒரு வேளை கிருஷ்ணன் தன்னை விட்டு விடுவானோ என்று பயந்து மூர்ச்சித்து விழுந்து விட்டாள். பிறகு கிருஷ்ணன் அவளை எடுத்து அணைத்துக்கொண்டு ''நான் பரிகாசத்திற்காகப் பேசினேன். உனக்கு என்னிடம் இருக்கும் பக்தி எனக்குத் தெரியாதா''. என்று அவளைச் சமதானப்படுத்தினர்.

## 19. ஆர்யாம்பாள்

[ஸ்ரீ சங்கர மண்டப வாசற்படிக்கு மேல்]

ஆர்யாம்பாள் ஆதிசங்கராசாரியாரின் தாயார். சிவகுருவின் பத்னி. இருவரும் வெகு நாள் குழந்தை இல்லாமல் வ்ருஷாசலம் சென்று அங்கு சிவபெருமானைப் பிரார்த்தித்துக்கொண்டிருந்தார்கள். ஒரு சமயம்அவர்கள் இருவருக்கும் சுவப்னத்தில் சிவ பிரான்தோன்றி, 'தீர்க்காயுசுள்ள, ஆனால்நல்ல குண மில்லாத அநேக புத்ரர்கள் வேண்டுமா? அல்லது



சிவகுரு-ஆர்யாம்பாள்

மிகவும் புத்திசாலியாயுள்ள, ஆனால் அல்பாயுசுள்ள ஒரு குமாரன் வேண்டுமா?' என்று கேட்க,'புத்திசாலி யான குமாரன்தான் வேண்டு' மென்று அவர்கள் கேட்டார்கள். 'அப்படியே' என்று சொல்லி அவர் களுக்குச் சிவபிரானே குமாரராய் பிறந்து, சங் கரர் என்னும் பெயருடன் விளங்கினர். இவர்கள் விருஷாசலத்தில் பகவானைப் பிரார்த்திப்பதை இந்தச் சிலைக் காட்டுகிறது.

## 20. கனகதாரா

[ஸ்ரீ சரஸ்வதி மண்டபம் வாசற்படிக்குமேல்]

ஸ்ரீ ஆசார்யாள், அவருக்கு உபநயனம் ஆன பிறகு, அவருடைய ஏழாவது வயதில் ஓர் ஏழைப் பிராம்மணர் வீட்டிற்குச் சென்று முறைப்படி 'பவதி பிக்ஷாம் தேஹி' என்று கேட்டார். அந்த வீட்டு பிராமணர் அச்சமயம் உஞ்ச வ்ருத்தி வாங்க வெளியே



போயிருந்தார். ஒவ்வொரு நாளும் அவர் உஞ்சவிருத்திக்குப் போய், கொண்டுவரும் அரிசியை வைத்துக் கொண்டுதான் அவர்கள் வீட்டில் சமையல் நடக்க வேணும். ஆசார்யர் பிக்ஷைக்குப்போன சமயம் அவருக்குக்கொடுப்பதற்கு அன்னம் இல்லாமல்

போகவே அந்தப் பிராம்மண பத்தினி மிகவும் வருத்தத்துடன் வீடு முழுவதும் ஏதாவது கிடைக்குமா என்று தேடினாள். அன்று துவாதசி யாதலால், அன்று சேர்ப்பதற்காக அங்கு வைத்திருந்த ஒரு அழுகிய நெல்லிக்காய் அவள் கண்களில் பட்டது. அதை அவருடைய பிக்ஷாபாத்திரத்தில் இட்டாள். வேறு ஒன்றும் கொடுக்க முடியவில்லையே என்று வருத்தப்பட்டாள். இதைக்கண்ட ஆசார்யர் அவளுக்கு அனுக்ஹரம் பண்ணவேண்டுமென்று லக்ஷ்மியைப் பிரார்த்தித்தார். "கனகதாரா ஸ்தோத்ரம்" என்னும் ஸ்தோத்திரத்தினால், லக்ஷ்மியைத் துதித்தார். அவ்வீட்டில், தங்க நெல்லிக்காயை லக்ஷ்மி சொரிந்தாள். இங்கு ஆசார்யாள் பிக்ஷை கேட்பதும், அந்த அம்மாள் நெல்லிக்காய் போடுவதும், மேலே இருந்து கஜலக்ஷ்மி கனகதாரை பொழிவது போலவும் காட்டப்பட்டிருக்கிறது.

## 21. சரசவாணி

[ஸ்ரீ சரஸ்வதி மண்டபம் வாசற்படிக்கு இடதுபக்கம்]

ஆசார்யாள் பாஷ்யங்கள் இயற்றிய பிறகு ப்ரயாகையில் இருந்த 'குமாரிலபட்டர்' என்னும் பூர்வமீமாம்சவல்லவரைத் தரிசித்து அவருடன்வாதம் செய்ய வேண்டும் என்ற எண்ணத்துடன் ப்ரயாகை சென்றார். குமாரிலபட்டர் பௌத்த க்ரந்த விஷயங்கள் நன்றாய் அறிந்துகொள்ள வேண்டுமென்ற எண்ணத்துடன் தானும் ஒரு பௌத்தராக

இருந்து அவர்களிடம் எல்லாம் கற்றுக்கொண்டு பிறகு பௌத்த மதத்தைக் கண்டித்தார். இது ஒரு குருத்ரோகமாதலால், அதற்குப் பிராயச்சித்தமாக உமியில் அக்னியிட்டு அதில் கொஞ்சம் கொஞ்சமாய்த் தன் சரீரத்தை எரித்துக் கொண்டிருந்தார். இந்த 'சமயத்தில், ஆசார்யாள் அவரிடம் வந்து சேர, தங்களைக் கண்டு "தங்களுடன் வாதம் செய்ய வேண்டுமென்று வந்தேன். தங்களுடைய சரீரத்தை ஸ்வஸ்தமாக்கிவிடுகிறேன்" என்று சொன்னார். ஆனால்



சரசவாணி

பட்டர், 'வேண்டாம்; மாஹிஷ்மதி என்னும் நகரத்தில் என் சிஷ்யன் மண்டன மிச்ரர் இருக்கிறார். அவரிடம் போய் வாதம் செய்யலாம்' என்று சொல்ல, அப்படியே மாஹிஷ்மதிக்குச் சென்று மண்டனமிச்ரருடன் வாதம் செய்தார். அந்தவாதத்திற்கு மத்யஸ்தராக ஸரஸ்வதியின் அவதாரமாகச் சொல்லப்பட்ட மண்டன மிச்ரரின் பத்னியான சரசவாணியை ஏற்

பாடு செய்தார்கள். அவள் இருவர் வலக்கையிலும் இரு புஷ்ப மாலைகளை அணிவித்து யாருடைய மாலை வாடுகிறதோ அவர்கள் தோற்றவராவார்கள் என்று ஏற்பாடு செய்து வாதம் நடந்தது. மண்டனமிச்ரர் தோற்றார். இங்கு சங்கரரும் மண்டன மிச்ரரும் வாதம் செய்வதும் சரசவாணி மத்யஸ்தராயிருப்பதும் காட்டப்பட்டிருக்கிறது.

